ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# ஆசார்ய வைபவ மஞ்ஜரி

## [மூன்றும் பாகம்]

### ஸ்ரீபராசரபட்டர் வைபவம்

### (திருத்தம்பியார் வைபவமும் அடங்கியது)

ஸ்ரீ பராஶரப₄ட்டார்ய: ஸ்ரீரங்கேஶ புரோஹித: |
ஸ்ரீவத்ஸாங்கஸுத: ஸ்ரீமாந் ஶ்ரேயஸே மேஸ்து பூ₄யஸே ||

[ஸ்ரீரங்க₃நாத₂னுக்குப் புரோஹிதராய், ஸ்ரீவத்ஸாங்கரென்னும் கூரத்தாழ்வானின் குமாரராய், திருவுடையவரான ஸ்ரீபராஶர ப₄ட்டார்யர் எனக்கு மிகுதியான நன்மையின் பொருட்டு ஆகட்டும்.]

எம்பெருமானாருடைய சிஷ்யர்களில் முதல்வரான கூரத்தாழ்வானும், அவருடைய தே₃விகளான ஆண்டாளும், பரம விரக்தர்களாய், விஹித விஷய நிவ்ருத்தியுடையவர்களாய் (பதி பத்நீ ஸம்யோக₃ம் அற்றவர்களாய்) வாழ்ந்து வந்தார்கள். மழைக் காலத்தில் ஒருநாள் நடுப்பகல் வரையில் பெருமழை பொழிந்தமையாலே ஆழ்வான் உபாத₃ானத்திற்குச் செல்லமுடியவில்லை. மறுநாளைக்கென்று சேர்த்து வைக்கும் பழக்கமும் இல்லை. ஆகையால் எம்பெருமானுக்கு ஒரு பழத்தை அமுது செய்வித்துத் தீர்த்த₂ ஸ்வீகாரம் செய்து நம்பெருமாளை ஸேவித்து, திருவாய்மொழியநுஸந்த₄ானமே த₄ாரகமாக, பட்டினியோடே சயனித்துக் கொண்டார், கூரத்தாழ்வான். அப்போது நம்பெருமாளுக்கு அரவணை ப்ரஸாத₃ம் அமுது செய்து திருச்சின்னம் ஸேவிக்கும் ஒலி கேட்டது. அதுகேட்ட ஆண்டாள் "உம்முடைய ப₄க்தர் பட்டினியே கிடக்க, நீர் என்ன குலாவிக் குலாவி அமுது செய்தருளுகிறீர்?" என்று நினைத்தாள். அந்நினைவு பெரிய பெருமாள் திருவுள்ளத்திலே உறுத்தி, திண்ணையிலே தூங்கிக்கொண்டிருந்த உத்தமநம்பி கனவிலே எழுந்தருளி, "நம்பீ! ஆழ்வான் பட்டினி கிடக்கிறார்; நம் அரவணை ப்ரஸாதத்தை—ச₂த்ர சாமரங்கள், ஸகல வாத்₃யங்களோடு ஶிரஸா வஹித்துக்கொண்டு போய்க்

கொடும்'' என்று நியமித்தருளினார். நம்பியும் உடனே எழுந்
திருந்து, அவ்வண்ணமே ஆழ்வான் திருமாளிகைக்கு அரவணை
யைக்கொண்டு சென்று ''நம்பெருமாள் அனுப்பியிருக்கிறார்; அங்
கீ$_3$கரியும்'' என்று சொல்ல, ஆழ்வான் அதை ப்ரஸா வஹித்
துக்கொண்டு, தனக்கும் ஆண்டாளுக்குமாக இரண்டு திரளைகளை
ஸ்வீகரித்து, எஞ்சியதை ஸ்ரீப$_4$ண்ட$_3$ாரத்துக்கு அனுப்பிவிட்டார்.
ஆண்டாளைப்பார்த்து ''நீ என்ன நினைத்தாய்''? என்று ஆழ்
வான் கேட்க அவளும் தன் நினைவைச் சொல்ல, ''நீ இப்படி
எண்ணலாமோ?'' என்று வெறுத்து வார்த்தை சொன்ன ஆழ்வான்
ப்ரஸாத$_3$த்தைத் தாமும் ஏற்றுக்கொண்டு, அவளுக்கும் அருளி
னார். புத்ர காமேஷ்டி யாக$_3$த்திலுண்டான பாயஸத்தினால்
த$_3$சரத$_2$ சக்ரவர்த்திக்கு நான்கு குமாரர்கள் அவதரித்ததுபோலே,
இவ்விரண்டு திரளைகளால் ப$_4$ட்டரும் சீராமப்பிள்ளையும் அவ
தரித்தார்கள். பட்டர் மத்$_4$யம வயஸ்ஸிலேயே பரமபதி$_3$த்து
விட்டார் என்பதும், எம்பெருமானாருக்குப் பிறகு த$_3$ர்ஶநம் நிர்
வஹித்து வந்தார் என்பதும் ப்ரஸித்$_3$த$_4$மாகையாலே எம்பெரு
மானாருக்கு சுமார் 90 வயஸ்ஸும் ஆழ்வானுக்கு சுமார் நூறு
வயஸ்ஸும் நடக்கும்போதே, க்ருமிகண்ட$_2$ன் உபத்$_3$ரவத்துக்கு
முன் பட்டர் அவதரித்திருக்கவேண்டும். வைகாசி அனுஷத்தில்
பட்டர் அவ்தரித்தார் என்பது ப$_3$ஹுக்$_3$ரந்த$_2$ ஸித்$_3$த$_4$ம். இவர்
பிறந்தவுடன் இவருக்கு நாமகரணம் செய்வதற்காக எம்பெருமா
னார் குழந்தையை எம்பாரை எடுத்துவரச் சொல்ல, அவர்
குழந்தையின் முகப்பொலிவைக் கண்டு ரக்ஷையாக த்$_3$வயானு
ஸந்த$_4$ானம் செய்துவர, குழந்தையின் திருமுக ஒளியைக் கண்ட
எம்பெருமானார் ''எம்பாரே! த்$_3$வயம் பரமளியாநின்றது; என்
செய்தீர்?'' என்று கேட்க, ''குழந்தைக்குக் காப்பாக த்$_3$வயானு
ஸந்த$_4$ானம் செய்து வந்தேன்'' என்று பதில் உரைத்தார் எம்
பார். அதுகேட்ட எம்பெருமானார், ''இக்குழந்தைக்குக் கர்த்
தவ்யாம்ஶமான மந்த்ரோபதே$_3$ஶத்திற்கு முற்பட்ட நீரே இதற்
குப் பஞ்சஸம்ஸ்காரம் செய்யும் ஆசார்யராகவும் ஆகக்கடவீர்''
என்று நியமித்துத் தம் கையாலே ஐம்படைத் தாலியையும்
குழந்தைக்குச் சாத்தியருளி, ஆளவந்தாருடைய இரண்டாம்
விருப்பத்தைத் தீர்ப்பதற்காக ஸ்ரீபராஶர ப$_4$க$_3$வான் திருநாமமாக,
ஸ்ரீபராஶரபட்டர் என்று குழந்தைக்குத் திருநாமமிட்டார். ஸ்ரீபரா
ஶரபட்டர் ப$_3$ால்யத்திலேயே அதிமேத$_4$ாவியாய் எம்பெருமானாரா
லும், நம்பெருமாளாலும் ஸ்ரீரங்க$_3$ நாச்சியாராலும் சீராட்டி
வளர்க்கப்பட்டார். தம் புத்ரனாக அபிமானித்து, திருமணத்தூண்

களிடையே தொட்டிலிட்டு நம்பெருமாள் பட்டரை லாளனம் செய்தார் என்பது ப்ரஸித்₃த₄ம். ''ஸ்ரீரங்கராஜ கமலாபத₃லாலித த்வம்' என்று பட்டரும் இதை ஸ்ரீரங்க₃ராஜ ஸ்தவத்தில் அருளி யிருக்கிறார். பட்டருக்கு ஸ்ரீரங்கநாதன் என்னும் திருநாமமும் உண்டு என்பது அவர் அருளிய ஸஹஸ்ரநாம ப₄ாஷ்யத்தி லிருந்து விளங்குகிறது.

பட்டர் சிறுவயஸ்ஸிலேயே மஹா மேதாவியாய் இருந்தார். ''ஸர்வஜ்ஞபட்டன்''என்பவன் ஒருவன் விருதுகளை ஊதிக்கொண்டு பல்லக்கிலே சென்றான். அதைக்கண்ட சிறுவரான பட்டர் ''உடையவர், ஆழ்வான், ஆண்டான், அருளாளப் பெருமாளெம் பெருமானார், எம்பார் முதலான பெரியவர்களிருக்குமிடத்தில் இவனாரடா 'ஸர்வஜ்ஞபட்டன்' என்று விருதூதி வருகிறான்?'' என்று, திருக்கையிலே புழுதியை அள்ளிக்கொண்டு அவனைப் பார்த்து, ''நீ ஸர்வஜ்ஞனன்றோ, இது எத்தனை? சொல்லு'' என்று கேட்டார். அவன் லஜ்ஜையடைந்து ஒன்றும் சொல்ல மாட்டாமல் வாயடைத்துத் தலைகவிழ்ந்து நின்றான். பட்டரும் அவனைப்பார்த்து, ''கெடுவாய்! இது ஒரு 'கைப்புழுதி' என்று சொல்லி விருதூதிச் செல்லமுடியாமல் அறிவிலியாய் விட்டாயே; இனி உன்னுடைய விருதுகளையும் ஆட₃ம்ப₃ரங்களையும் கைவிடு வாய்'' என்று கூறினார். அவனும் ''இவர் யாருடைய குமாரர்?'' என்று விசாரித்து, 'ஆழ்வான் குமாரர்' என்று அங்குள்ளார் சொல்லக்கேட்டு, ''பறப்பதன் குட்டி தவழுமோ?'' என்று ஆஸ் சர்யப்பட்டு பட்டரைத் தன் பல்லக்கிலே வைத்துக்கொண்டு ஆழ்வான் திருமாளிகையிலே விட்டுச்சென்றான்—என்னும் செய்தி இளமையிலேயே இவருடைய மேத₄ா விலாஸத்தைக் காட்டு கிறது. வேத₃ாத்₄யயநம் செய்யும்போதும் ஏகசந்தை க்₃ராஹி யாய் இருந்தவர் இவர். எம்பார் இவருக்குப் பஞ்சஸம்ஸ்காரம் செய்த ஆசாரியர். திருத்தகப்பனரான ஆழ்வானும் எம்பாரும் இவருக்கு ஸகலார்த்த₂ங்களையும் சொல்லிவைத்தார்கள். பெரிய பெருமாள் நியமனத்தாலே பெரியநம்பிகள் குடும்பத்தைச் சேர்ந்த மன்னியம்மனை பட்டருக்கு மணம் செய்தார்கள். தி₃வ்யப்ரப₃ந்த₄ வ்யாக்₂யானங்களிலே ஆளவந்தார் முதலான பூர்வாசார்யர் களின் நிர்வாஹங்களைக் காட்டிலும் எம்பெருமானார் நிர்வாஹம் சிறப்புற்றிருக்கும். எம்பெருமானார் நிர்வாஹத்தைக் காட்டிலும் பட்டர் நிர்வாஹம் சிறப்புற்றிருக்கும். பட்டர் நிர்வாஹத்திற்கு மேற்பட்ட நிர்வாஹம் இல்லை. இதை தி₃வ்யப்ரப₃ந்த₄ வ்யாக்₂யா

நங்களில் பலவிடங்களில் காணலாம். தமக்கு முன்பே பரமபத₃மடைந்த கூரத்தாழ்வானுக்கு பட்டரைக்கொண்டு ப்ரஹ்மமேத₄ ஸம்ஸ்காரம் செய்வித்தார் எம்பெருமானார். எம்பெருமானாராலே தமக்குப் பிறகு த₃ர்ஶந நிர்வாஹகராக நியமிக்கப்பட்டவர் பட்டர். ஸ்ரீரங்க₃நாத₂னாலே முதன் முதலில் "வேத₃ாந்தாசார்யர்" என்னும் விருது கொடுக்கப்பட்டவர் பட்டர். எம்பெருமானார் நியமித்தபடி மைஸூர் ப்ராந்தத்திலே "வேத₃ாந்தி மாத₄வாசார்யர்" என்னும் பெயர் கொண்ட அத்₃வைதி வித்₃வானை (எம்பெருமானார் காலத்திற்குப் பிறகு) வெற்றிகொண்டு, ஸ்ரீவைஷ்ணவ ஶிக₂ாமணியாக்கினார் பட்டர். இந்த வேத₃ாந்தியே பட்டரால் திருத்தப்பெற்ற பின்பு "நஞ்ஜீயர்" என்னும் திருநாமத்துடன் உத்தமாஶ்ரமியாகி, ப₄ட்டரையல்லதறியாதவராய், திருவாய்மொழிக்கு ஒன்பதினாயிரப்படி, மற்றும் பல தி₃வ்யப்ரப₃ந்த₄ வ்யாக்₂யானங்களையும் செய்தருளினார்.

அக்காலத்தில் "வீரஸுந்த₃ரப்₃ரஹ்மராயன்" என்பவன் பெரிய பெருமாளுக்குத் திருமதிள் கட்டி வந்தான். அப்போது ஆழ்வானுடைய சிஷ்யரான பிள்ளைப்பிள்ளையாழ்வானுடைய திருமாளிகை குறுக்கிட்டபடியால் அதை இடிக்க நினைத்தான் அவன். அப்போது பட்டர் "உம்முடைய திருமதிள் பெருமாளுக்கு ரக்ஷகமன்று; இங்கிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுடைய மங்க₃ளாஶாஸனமே உண்மையான ரக்ஷகம். ஆகையால் தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலை கட்டுகிற இடத்தை ஒதுக்கித் திருமங்கையாழ்வார் திருமதிள் கட்டினாற்போலே, நீரும் பிள்ளைப்பிள்ளையாழ்வான் திருமாளிகையை ஒதுக்கித் திருமதிள் கட்டும்" என்று அவனை நியமித்தார். அந்நியமனத்தை மீறித் திருமாளிகையை இடித்துத் திருமதிள் கட்டினான் வீரஸுந்தரன். இதனால் ஏற்பட்ட மனஸ்தாபத்தாலே பட்டர் சில வருஷங்கள் திருக்கோட்டியூரிலே எழுந்தருளியிருந்தார். அப்போது திருக்கோட்டியூர் எம்பெருமான் விஷயமாக 'கோ₃ஷ்டீ₂நாத₂ஸ்தவ'மும், நம்பெருமாளைக் காணவேணும் என்னும் ஆர்த்தியைத் தெரிவிக்கும் ஸ்ரீரங்க₃நாத₂ ஸ்தோத்ரமும் பட்டர் அருளிச்செய்தார். வீர ஸுந்தரன் மரணமடைந்தபிறகு பட்டர் ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருளி, மறுபடியும் த₃ர்ஶநத்தை நிர்வஹித்து வந்தார். திருத்தகப்பனாரான கூரத்தாழ்வான் பரமபத₃நாத₂ன் விஷயமாக ஸ்ரீவைகுண்ட₂ஸ்தவமும், விப₄வங்கள் விஷயமாக அதிமானுஷஸ்தவமும், அழகர், தேவப்பெருமாள் விஷயமாக (முறையே) ஸுந்த₃ரபா₃ஹுஸ்தவமும், வரத₃ராஜஸ்தவமும்

அருளியதுபோலே, ஸ்ரீரங்க₃ராஜன் விஷயமாக ஸ்தவமருளாத குறைதீர, பெரியபெருமாள் விஷயமாக இரு ஶதகங்கள் கொண்ட ஸ்ரீரங்க₃ராஜ ஸ்தவத்தையும், அவரது ஸ்ரீஸ்தவத்திற்கு விவரணமாக ஸ்ரீரங்க₃நாச்சியார் விஷயமாக ஸ்ரீகு₃ணரத்ந கோஶத்தையும், ரஹஸ்யத்ரய விவரணமாக அஷ்டஶ்லோகியையும், ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம வ்யாக்₂யாநமான ப₄க₃வத்₃கு₃ண த₃ர்ப்பணத்தையும், தத்வவிசாரபரமான 'தத்வ ரத்நாகர'த்தையும், 'லக்ஷ்மீ கல்யாணம்' என்னும் காவியத்தையும், 'க்ரியா தீ₃பம்' என்னும் நித்யக்₃ரந்த₂த்தையும், கைசிக புராணத்திற்கு மணிப்ரவாள நடையில் வ்யாக்₂யானத்தையும் அருளிச்செய்தார் பட்டர். இவற்றில் தத்வரத்நாகரமும், லக்ஷ்மீ கல்யாணமும் தவிர மற்றவைகள் இப்போதும் உள்ளன. இவர் இவற்றில் நிலைநாட்டிய தென்னாசார்ய ஸம்ப்ரதா₃யக் கொள்கைகளில் முக்கியமானவை பின்வருமாறு :— (1) அஷ்டஶ்லோகியில் பிராட்டிக்கும், ப்ரபத்திக்கும் அநுபாயத்வம் முதலானவற்றை இவர் நிலைநாட்டியதையே பெரியவாச்சான்பிள்ளை பரந்த ரஹஸ்யத்தில் விவரித்தருளினார். (2) ஸஹஸ்ரநாம பா₄ஷ்யத்தில் ஸம்ஸாரத்திற்கும், பரமபத₃த்திற்கும் இடைப்பட்ட இடமே தாழ்ந்த முக்தியான கைவல்யாநுப₄வம் செய்யும் இடம் என்று காட்டினார். (3) ஸஹஸ்ரநாம பா₄ஷ்யத்திலேயே ப₄க்தி முதலான அரிய உபாயங்களால் ஸாதி₄க்கும் மோக்ஷத்தைத் திருநாம ஸங்கீர்த்தனம் முதலான எளிய உபாயங்களாலும் ஸாதி₄க்கலாம் என நிலைநாட்டினார். (4) "அநுஶிகி₂நி ஶிகீ₂வ க்ரீட₃ஸி ஸ்ரீஸமக்ஷம்" [ர. ஸ்த. 2-44] என்று பரம புருஷன் ஜக₃த்ஸ்ருஷ்டி முதலானவற்றைப் பிராட்டியின் திருமுன்பே செய்வதற்கு த்₃ருஷ்டாந்தமாகத் தோகையில்லாத பெண்மயிலின் முன்பு ஆண்மயில் தோகை விரித்தாடுவதைக் கூறுகையாலே, பிராட்டிக்கு ஜக₃ச்ச₂ரீரத்வமும், ஜக₃த்காரணத்வமும் அதனால் வரும் பரப்ரஹ்மத்வமும் கிடையாது என்று காட்டினார். மற்றும் பலவும் உண்டு.

"வீரஶிகா₃மணிப் பல்லவராயன்" என்னும் அரசன் "எனக்குத் தஞ்சமாய் இருப்பதொரு அர்த்த₂ம் அருளிச்செய்ய வேணும்" என்று கேட்க, "கடற்கரை வெளியை நினைத்திரும்" என்று அருளினார் பட்டர். "கடற்கரை வெளியிலே உறங்கின கோடிக்கணக்கான வானரஸேனையைக் கையும் வில்லுமாக இருந்து ரக்ஷித்த பெருமாளே நமக்கு ரக்ஷகர்" என்று

கருத்து. "த்ரிபு4வநவீரதே3வராயன்" என்பவன் பட்டரை ஒரு நாள் தன் ஸபை4க்கு வந்துபோகச் சொல்ல, "பெருமாள் அஞ்சலென்ற கை மறுத்தாலும், அவர் வாசலொழிய வேறொரு வாசலிலே புகமாட்டேன்" என்று சொல்லியனுப்பினார் பட்டர். பட்டருடைய பெருமையைக் கண்ட அவர் திருத்தாயாரான ஆண்டாள் அவர் அறியாமல் அவருடைய ஸ்ரீபாத3தீர்த்த2த்தை ஸ்வீகரித்தாள் என்று பூர்வ க்3ரந்த2ங்கள் கூறும். பட்டர் நஞ்சீயருக்குப் பிள்ளான் அருளிச்செய்த ஆறாயிரப்படியைக் காலக்ஷேபம் ஸாதித்தார். பட்டர் அநுமதியுடன் சிறிது விளக்கமாக நஞ்சீயர் ஒன்பதினாயிரப்படி. வ்யாக்2யானம் அருளிச்செய்தார். மத்4யம வயஸ்ஸிலேயே (சுமார் 50 வயஸ்ஸாகும்போது) ஒரு கைசிக த்3வாத3சியன்று கைசிகபுராணம் வாசித்தபிறகு நம்பெருமாள் மிகவும் ப்ரீத்து "பட்டரே! உமக்கு மேலைவீடு தந்தோம்" என்று திருவுள்ளமாக, பட்டரும் "மஹாப்ரஸாத3ம்" என்று ஏற்றுக் கொண்டார். திருமாளிகைக்கு வந்தவுடன் திருத்தாயாரான ஆண்டாளை ஸேவித்து நிற்க, "நலமந்தமில்லதோர் நாடு புகுவீர்" என்று அவள் ஆசீர்வதிக்க, பட்டரும் "அம்மா அடியேன் வேண்டுவதீதே" என்று உகந்தருளினார். திருவரங்கத்திலுள்ளார் அனைவரும் திருமாளிகையிலே அமுதுசெய்து பெருங்கூட்டமாக எழுந்தருளியிருக்க, அவர்களுக்குத் திருநெடுந்தாண்டகத்திற்கு அர்த்த2ம் அருளிச்செய்யும்போது "அஞ்சிறைப்புள்தனிப்பாகன்" என்கிறவிடத்திலே "பறவையேறு பரம்புருடா! நீயென்னைக் கைக்கொண்டபின், பிறவியென்னுங்கடலும் வற்றிப் பெரும்பதமாகின்றதால்" என்று இத்தை இரட்டித்து அநுஸந்தித்தருளித் திருக்கண்களை மலர விழித்துத் திருமேனியைச் சிலிர்ப்பித்துப் புன்முறுவல் செய்து, திருமுடியிலே அஞ்சலி செய்துகொண்டு அணையிலே சாய்ந்து நிற்கச்செய்தே, ஸிர:கபாலம் வெடித்துத் திருநாட்டுக்கு எழுந்தருளினார்.

'இன்னம் சிலநாள் இருந்தால் பரமபத3த்திற்குப் படிக்கட்டுக் கட்டிவிடுவேன்' என்று தம் திருவாக்காலே அருளிச்செய்த ப4ட்டர் மத்4யம வயஸ்ஸிலேயே பரமபதி3த்தது நம் தௌ3ர்ப்ப4ாக்3யமேயாகும். இவர் நஞ்சீயரைத் திருத்தியவகையும், இவருக்கும் நஞ்சீயருக்கும் நடந்த பரிமாற்றங்களும், வரவிருக்கும் நஞ்சீயர் வைப4வத்திலே காணலாம்.

ஸ்ரீபராஸரபட்டர் வைப4வம் முற்றிற்று.

## ஐதிஹ்ய நிர்வாஹங்கள்

1. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம் : முதல் பாகம் பக்கம் 241 to 246 காண்க.

2. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம் : முதல் பாகம் பக்கம் 284, 285 காண்க.

3. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம் : முதல் பாகம் பக்கம் 324, 325 காண்க.

4. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம் : முதல் பாகம் பக்கம் 331, 332 காண்க.

5. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம் : இரண்டாம் பாகம் பக்கம் 55, 56 காண்க.

6. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம் : அந்தரம் பட்டர் ஸ்ரீபாத$_3$த்து முதலிகளுடனே பெருங்கூட்டத் திருவோலக்கமாக எழுந்தருளியிருந்து த$_3$ர்ஶநம் நிர்வஹித்தருளுகிற காலத்திலே, ஒரு தீர்த்த$_2$வாஸிப்$_3$ராஹ்மணன் வந்து பட்டரை ஸேவித்து அவருடைய வேத$_3$ாந்தோபந்யாஸ சாதுர்யத்தையும் கோ$_3$ஷ்டி$_2$யின் வைப$_4$வத்தையுங்கண்டு நின்று 'பட்டரே! மேல்நாட்டில் வேத$_3$ாந்தியென்று ஒரு பெரிய வித்$_3$வானிருக்கிறான்; அவனுடைய வித்$_3$யையும் கோ$_3$ஷ்டி$_2$யும்போலே உமக்குமிருந்தது' என்ன, பட்டரும் ப்$_3$ராஹ்மணன் சொன்ன வார்த்தையைக் கேட்டருளி, 'ஆமோ! அப்படியும் ஒரு வித்$_3$வானுண்டோ?' என்ன, 'உண்டு' என்று சொல்லி, அந்த ப்$_3$ராஹ்மணன் இங்கு நின்றும் புறப்பட்டு மேல்நாட்டுக்குப்போய் வேத$_3$ாந்தி கோ$_3$ஷ்டி$_2$யிலே சென்று "வேத$_3$ாந்திகளே! உம்முடைய வித்$_3$யைக்கும் கோ$_3$ஷ்டி$_2$க்கும் ஸத்$_3$ருஶராய் பட்டரென்பாரொருவர் இரண்டாற்றுக்கும் நடுவே எழுந்தருளியிருக்கிறார்" என்ன, வேத$_3$ாந்திகளும் ப்ராஹ்மணனைப் பார்த்து 'ஆமோ! பட்டர் நமக்கு ஒத்த வித்$_3$வானோ?' என்ன, அவனும் பட்டர் உம்மிலும் அதி$_4$கர்' என்ன, அவனும், 'அவருக்கு எந்த ஶாஸ்த்ரம் போரும்?' என்ன, ப்$_3$ராஹ்மணனும் 'ஶப்$_3$த$_3$ தர்க்க பூர்வோத்தரமீமாம்ஸை தொடக்கமான ஸகல ஶாஸ்த்ரங்களும் பட்டருக்குப் போரும்' என்ன, வேத$_3$ாந்தியும் இவன் சொன்னதைக்கேட்டு 'இவ்விபூ$_4$தியிலே நமக்கு ஒருவரும் எதிரில்லையென்று ஷட்$_3$த$_3$ர்ஶநத்திற்கும் ஆஸநமிட்டு அதன்மேலே உயரவிருந்தோம்; பட்டர் நம்மிலும் அதி$_4$கரென்று ப்$_3$ராஹ்மணன் சொன்னானே!' என்று அன்று தொடங்கித் திடுக்கிட்டிருந்தான்.

அவ்வளவிலே அந்த ப்3ராஹ்மணன் அங்கு நின்றும் புறப்பட்டுக் கோயிலுக்கு வந்து பட்டர் ஸந்நிதி4யிலே வந்து 'பட்டரே! உம்முடைய வைப4வமெல்லாம் வேதா3ந்திக்குச் சொன்னேன்' என்ன, பட்டரும் ப்3ராஹ்மணனைக் குறித்து 'அவன் அதுக்கு என்ன சொன்னான்?' என்ன, அவனும் 'பட்டருக்கு எந்த ஶாஸ்த்ரம் போருமென்று கேட்டான்' என்ன, பட்டரும் 'ப்3ராஹ்மணா! அதுக்கு நீ வேதா3ந்திகளுக்கு என்ன சொன்னாய்?' என்ன, அவனும் 'பட்டருக்கு ஶப்3த3தர்க்கங்களும் பூர்வோத்தர மீமாம்ஸைகளும் நன்றாகப் போருமென்று வேதா3ந்தியுடனே சொன்னேன்' என்ன, பட்டரும் அந்த ப்3ராஹ்மணனைக் குறித்து 'தீர்த்த2வாஸியாய் தே3ஶங்களெங்கும் நடையாடி எல்லாருடைய வித்2யா மாஹாத்ம்யங்களெல்லாம் அறிந்து நாக3ரிகனாயிருக்கிற நீ, நமக்குப் போருமதெல்லாம் அறிந்து வேதா3ந்திக்குச் சொல்லாமல் கேவலம் வேதா3ந்த ஶாஸ்த்ரங்களே போருமென்று தப்பச்சொன்னாயே!' என்ன, ப்3ராஹ்மணனும் பட்டரைக்குறித்து 'இந்த லோகத்திலே நடையாடுகிற ஶாஸ்த்ரமொழிய உமக்கு மற்ற எது போருமென்று வேதா3ந்திக்குச் சொல்லுவது?' என்ன, 'திருநெடுந்தாண்டகம் போருமென்று வேதா3ந்திக்குச் சொல்லாதிருந்தாயே!' என்று வெறுத்து அருளிச்செய்துவிட, அவனும் பின்னையும் மேல் நாட்டுக்குப்போய் வேதா3ந்தியுடனே இச்செய்தியைச் சொல்ல, வேதா3ந்தியும் 'திருநெடுந்தாண்டகமென்கிற ஶப்3த3த்திற்குத்தானே அர்த்தமாகிறதில்லை; அவர் எப்படிப்பட்ட வித்3வானோ!' என்று விஸ்மயப்பட்டிருக்கச் செய்தே; பட்டரும் 'வேதா3ந்தியை நம்முடைய த3ர்ஶநத்திலே அந்தர்ப்பூ4தராம்படி திருத்துமென்று உடையவர் நியமித்தருளினது அவஶ்யம் கர்த்தவ்யம்' என்று தம் திருவுள்ளத்திலே கொண்டு பெருமாள் ஸந்நிதி4யிலே சென்று ஸேவித்துநின்று 'நாயந்தே! மேல்நாட்டிலே வேதா3ந்தியென்று ஒரு பெரிய வித்3வானிருக்கிறான்; அவனைத் திருத்தி நம் த3ர்ஶநப்ரவர்த்தகனும்படி பண்ணவேண்டுமென்று அங்கேற விடை கொள்வதாக இரா நின்றேன்; தேவரீர் அவனை நன்றாகத் திருத்தி ஸ்ரீராமாநுஜ ஸித்3தா4ந்தத்திற்கு நிர்வாஹகனும்படி திருவுள்ளம் பற்றியருளவேணும்' என்று பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் 'அப்படியே யாகக்கடவன்; த்வரித்துப் போய்வாரும்' என்று திருவுள்ளமுகந்து தீர்த்த2ம் திருமாலை திருப்பரியட்டத்துடனே தம் குமாரரான வாசிதோன்ற அநேகம் திருவாப4ரணம் திருப்பரியட்டம் ந்ருத்தகீ3தவாத்3யங்களையும் தமக்கு உண்டான ஸகல பரிஜந பரிச்ச2த3ங்களையும் கூட்டி, 'போம்' என்று விடை கொடுத்தருள;

பட்டரும் புறப்பட்டு மேல்நாட்டிலே எழுந்தருளிக் காவேரிக் கரையிலே சிறுப்புத்தூரண்டையிலே நின்றருள, அநந்தாழ்வான் 'ஆழ்வான் குமாரர் பட்டர் எழுந்தருளினர்' என்று கேட்டுச் சடக்கெனப் புறப்பட்டு எழுந்தருளித் திருக்காவேரிக் கரையிலே பட்டரைக்கண்டு ஸேவித்து 'ஐயோ! ஸுகுமாரரான நீர், காடும் மலையுங் கடந்து இத்தனைதூரம் எழுந்தருளலாமோ?' என்ன, பட்டரும் திருவடிகளிலே விழுந்து அநந்தாழ்வானை ஸேவித்துத் 'உடையவர் மேல்நாட்டிலேபோய் வேத₃ாந்தியைத் திருத்தி நம்த₃ர்ஶந ப்ரவர்த்தகராம்படி பண்ணினென்று நியமித்தருளினரே; அப்படியே நம்பெருமாளும் விடை ஸாதித்து அனுப்பியருளினர்' என்று விண்ணப்பஞ்செய்ய, அநந்தாழ்வானும் '*எங்கள் குடிக்கரசே! வாரும்' என்று பட்டரை எடுத்து அணைத்துக்கொண்டு போய்

யாத₃வாத்₃ரேர் ஜிக₃மிஷா யேஷாங்கேஷாஞ்ச வித்₃யதே |
தேஷாம் தே₃ஶே யமப₄டா: ந க₃ச்ச₂ந்தி கதா₃சந ||

[யாதவாத்ரிக்குச் செல்லவேண்டும் என்னும் விருப்பம் எத்தனை தாழ்ந்தவர்களுக்கு ஏற்பட்டாலும், அவர்களிருக்குமிடத்தில் யமதூதர்கள் ஒரு போதும் செல்லார்கள்.] என்று யது₃ஶைல யியாஸை யாவர் சிலர்க்கு உண்டாயிருக்கும், அவர்கள் வஸிக்குந் தே₃ஶத்தில் யமப₄டர் மறந்தும் புகுரார்களென்றும்,

ஸஹஸ்ர ஶிக₂ரஸ்ஸோயம் ஸாக்ஷாச்சே₂ஷாத்மகோ கி₃ரி: |
வைகுண்ட₂ாத₃பி யத்ராஹம் ரமயா ஸஹிதோ ரமே ||

[ஆயிரம் சிகரமுடைய இம்மலை நேரே ஆதிசேஷனின் உருவாகும். இங்கு ஸ்ரீதேவியுடன் கூடிநின்று வைகுண்டத்திற் காட்டிலும் இன்புறுகிறேன்.] என்று ஸஹஸ்ர ப₂ணாமண்ட₃லமுடைய திருவநந்தாழ்வானவதாரமான யது₃கி₃ரி ஶிக₂ரத்திலே ஸமஸ்த கல்யாண கு₃ணங்களும் குன்றிலிட்ட விளக்காய் ப்ரகாஶிக்கும்படி பரமபத₃த்தையும் திருப்பாற்கடலையும் உபேக்ஷித்து *அரவிந்தப் பாவையுந் தானுமாய் *அல்லி மலர்மகள் போகமயக்குகளாய் நிற்க.

வைகுண்ட₃ வாஸிநஸ்ஸர்வே ஶேஷஶேஷாஶநாத₃ய: !
திர்யக்ஸ்த₂ாவர ஜந்மாநி ஶ்ரயந்தே யது₃பூ₄த₄ரே ||

[வைகுண்டத்தில் வாழும் சேஷன், விஷ்வக்ஸேனர் முதலான நித்யஸூரிகள், ஊர்வன நிற்பனவாக யாதவாத்ரியில் பிறப்பெடுத்துள்ளனர்.] என்று *வைகுந்த நாட்டில் வாழும் ஸேனைமுதலியார் திருவநந்தாழ்வான் முதலான நித்ய முக்தரெல்லாரும் திருநாடு *புல்லெழுந்து போம்படி குடிவாங்கி வந்து இஸ்ஸௌஶீல்யஸௌலப்$_4$யாநுப$_4$வார்த்த$_2$மாகத் திர்யக்ஸ்த$_2$ாவரஜந்மங்களைப் பரிக்$_2$ரஹித்து ஸுப்ரதிஷ்டி$_2$தராய் இங்கே வர்த்திக்கிறார்களென்றும் சொல்லும்படியான வைப$_4$வத்தையுடைய யாத$_3$வாத்$_3$ரியைக்கிட்டி சேதனன் பாத$_3$பீட$_2$த்திலே ஏறும் ப$_4$ாவனைகொண்டு செம்பொன் யது$_3$கி$_3$ரியேறித் திருக்கல்யாண ஸரஸ்ஸைக்கிட்டி,

காலே காலே ச ஸேவந்தாம் கல்யாணீதீர்த்த$_2$மத்$_3$பு$_4$தம் |
யத்ர தீர்த்தே$_2$ நிமஜ்ஜந்தோ யதயஸ் ஸம்ஶிதவ்ரதா: ||
உந்மஜ்ஜந்தி ப$_4$வாம்பே$_4$ாதி$_4$ கல்லோலகலஹாந்தராத் |
புஷ்கரே ந தத$_2$ா ப்ரீதிர் ந க$_3$ங்க$_3$ாயாம் ந யாமுநே ||
யத$_2$ா கல்யாண தீர்த்த$_3$ஸ்ய தீர்த்தே$_2$ கல்யாணசேதஸாம் |
தீர்த்தே$_2$ தத்ராமலே ஸ்நாத்வா முச்யந்தே ஸர்வகில்பி$_3$ஷை: ||
நாஸ்திகஶ்ச க்ருதக்$_4$நஶ்ச பரீவாத$_3$ பரோபி ச |
பரப்ரஶம்ஸாநிஷ்ட$_2$ஶ்ச ஸ்வப்ரஶம்ஸா பராயண: ||
யஜ்ஞவிக்$_4$நகரஶ்சைவ வேத$_3$ாத்$_4$யயநதூ$_3$ஷக: |
பரத$_3$ாராநுரக்தஶ்ச பாகபே$_4$த$_3$கரோபி ச ||
பரத்$_3$ரவ்யாபஹாரீ ச பாஷண்ட$_3$ாக$_3$மதத்பர: |
ஶூத்$_3$ராந்ந ப$_1$க்ஷகஶ்சைவ ஶ்வாதீ$_3$நாமுபலாளக: ||
த$_4$ர்மவிக்ரயஶீலஶ்ச ஶ்ராத்$_3$த$_4$பு$_4$க்$_3$ க்$_3$ராமயாஜக: |
தே$_3$வதாத்$_3$ரவ்யஹாரீ ச து$_3$ர்ப்பட$_3$ம்ப$_4$ஸமந்வித: ||
க$_3$வாம் க்லேஶகரஶ்சாபி ப்$_3$ராஹ்மணாநாஞ்ச நிந்த$_3$க: |
விஷ்ணுப$_4$க்தி விக$_4$ாதீ ச வ்ருஷலீபதிரேவ ச ||

[யாதொரு தீர்த்தத்தில் மூழ்குவதால், நல்விரதமுடைய யதிகள் ஸம்ஸாரக் கடலின் அலையெறிதலினின்றும் வெளிக்கிளம்புகிறார்களோ, ஆச்சர்யமான அந்தக் கல்யாணி தீர்த்தத்தை எல்லாக் காலத்திலும் (அனைவரும்) குடைந்தாடுவார்களாக. நன்னெஞ்சினர்க்குக் கல்யாணி தீர்த்தத்திற் போலே புஷ்கரத்திலோ கங்கையிலோ யமுநா தீர்த்தத்திலோ ப்ரீதி ஏற்படுவதில்லை. நாஸ்திகன், செய்ந்நன்றி கொன்றவன், பிறரைப் பழிப்பதையே தொழிலாக உடையோன், பிறரைப் புகழ்வதிலேயே ஊன்றியிருப்பவன், தன்னைப் புகழ்ந்து கொண்டேயிருப்பவன், யாகத்துக்கு இடையூறு செய்பவன், வேதமோது

வதைப் பழிப்பவன், பிறன்மனை நயப்பவன், விருந்தாளிக்குத் தாழ்ந்த உணவளிப்பவன், பிறர்பொருளைக் கவர்பவன், பாஷண்டா₃கம₃த்தில் ஈடுபடுபவன், சூத்ரனின் அன்னத்தைப் புசிப்பவன், நாய் முதலானவற்றைக் கொஞ்சுபவன், தர்மத்தை விலைக்கு விற்கும் இயல்வினன், ஶ்ராத்₃த₄ங்களில் புசிப்பதையே போதுபோக்காகக் கொண்டவன், கிராம புரோகிதன், தெய்வத்தின் சொத்தைக் கவர்பவன், கர்வமும், ஆடம்பரமும் உள்ளவன், பசுக்களை ஹிம்ஸிப்பவன், அந்தணர்களை நிந்திப்பவன், விஷ்ணு பக்தியைத் தடுப்பவன், சூத்ரஸ்திரீயை மணப்பவன் ஆகிய அனைவரும் குற்றமற்ற அந்தத் தீர்த்தத்தில் குளித்து எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுகிறார்கள்] என்று இப்படிப்பட்டிருக்கிறவர்களுடையபாவங்களைப்போக்கவல்ல திருக்கல்யாணியிலே நீராடிக் கேஶவாதி₃யான பன்னிரண்டு திருநாமஞ் சாத்தியருளி எழுந்தருள, அங்கிருந்த ஐம்பத்திருவர் முதலான அனைவரும் ஶட₂கோபன் முன்னிலையாக வந்து எதிர்கொள்ள, பட்டரும் ஸாஷ்டாங்க₃மாக ஸேவித்து தி₃வ்யநக₃ரிக்குள்ளேயெழுந்தருளிச் சதுராநந கோபுரத்தை அஞ்ஜலித்து உள்ளே புகுந்து, ஶ்ரீ ப₃லி பீடத்தருகே தாளுந் தடக்கையும் கூப்பித்தண்டன் ஸமர்ப்பித்து உடையவர் ஸந்நிதி₄க்கு எழுந்தருளி 'யோ நித்யம்' என்று தொடங்கி, ''ராமாநுஜஸ்ய சரணௌ ஶரணம் ப்ரபத்₃யே'' [எவரொருவர் அச்யுதனுடைய திருவடித் தாமரையிணையாகிற பொன்னில் பேராசையாலே, மற்ற பொருள்களைப் புல்லென மதித்தாரோ, என்னுடைய ஆசார்யராய், ஜ்ஞாநாதி₃கு₃ண பூர்ணராய் கருணைக்கோர் கடலான அத்தகைய ராமாநுஜருடைய திருவடிகளை ஶரணமடைகிறேன்.] என்று ஸேவித்து ராமாநுஜதி₃வாகரரையுந் திருவடித்தொழுது வாழ்த்தித் தீர்த்த₂ ப்ரஸாத₃ங்களும் பெற்று அவர் புருஷகாரமாக ப்ரத₃க்ஷிணமாக எழுந்தருளி,

பஶ்சாத₃பி விமாநஸ்ய ப்ராகாராந்தரமத்₄யத: |
ஸுத₃ர்ஶநஞ்ச லக்ஷ்மீஶ்ச வர்த்தேதே ஸர்வகாமதே₃ ||

[விமானத்தின் பின்புறத்திலும், மற்றொரு பிராகாரத்தின் நடுவிலும் திருவாழியாழ்வானும், யதுகிரி நாச்சியாரும் எல்லா விருப்பங்களையும் அளிப்பவர்களாய் எழுந்தருளியிருக்கிறார்கள்.] என்று சொல்லப்பட்ட திருவாழியாழ்வானையும் யது₃கி₃ரிநாச்சியாரையும் ஸேவித்து, ஆநந்த₃மயமான தி₃வ்ய விமாநத்தையும் தொழுது, உள்ளே எழுந்தருளி ஸாஷ்டாங்கமாக ஸேவித்து நம்மாழ்வாரையும் திருமங்கையாழ்வாரையும்

ஸேவித்து, செல்வப்பிள்ளையையும் திருவடித் தொழுது அவ் விக்₃ரஹ ஸௌந்த₃ர்யத்திலே ஆழங்கால்பட்டு நிற்க. செல்வப் பிள்ளையும் உகந்து தீர்த்த₂ம் திருமாலை ஶட₂கோபன் ப்ரஸாதி₃த் தருளப் பெற்றுப் புறப்பட்டு, ஸேனை முதலியாரையும் திருவடித் தொழுது, சண்ட₃ப்ரசண்ட₃ர்களான த்₃வார பாலகர்களநுமதி கொண்டு உள்ளே சென்று திருப்பல்லாண்டை அநுஸந்தி₄த்துத் திருநாராயணப் பெருமாளைப் பாத₃ாதி₃கேஶாந்தமாக ஸேவித்து அஞ்ஜலித்து நிற்க, திருநாராயணரும் மிகவும் உகப்போடே பட்டருக்குத் திருமாலை திருப்பரியட்டம் தீர்த்த₂ம் ஶட₂கோபனும் ப்ரஸாதி₃த்து விடைகொடுத்தருள, பட்டரும் அநந்தாழ்வானு டனே புறப்பட்டு எழுந்தருளி, வேத₃ாந்திகளிருக்கிற ஊர் ஆஸந்நமானவாறே. 'ஆழ்வான் குமாரர் பட்டர் வந்தார். அணி யரங்கன் குமாரர் பட்டர் வந்தார். வேத₃ாந்தாசார்ய பட்டர் வந்தார். வேதி₃யர்கள் தனித்தலைவர் வந்தார். ஸ்ரீபராசர பட்டர் வந்தார். பரவாதி₃மத₃ஹஸ்தி பஞ்சாநநர் வந்தார்' என்று பல திருச்சின்னம் பணிமாறுகை முதலான தூர்ய கே₃ாஷத்துடனே பெருந்திரளாக மஹாஸம்ப்₄ரமத்துடனே ஸர்வாப₄ரணபூ₄ஷிதராய், ச₂த்ரசாமரதாலவ்ருந்தாதி₃கள் ஸேவிக்க மணிப்பல்லக்கிலே எழுந்தருளாநிற்க, அவ்வளவிலே இரண்டு ப்₃ராஹ்மணர்கள் எதிரே வந்து பட்டரைப் பார்த்து 'நீர் ஆர்? அநேகம் ஸம்ப்₄ரமத் துடனே வந்தீர்; எங்கேற எழுந்தருளுகிறீர்?' என்று கேட்க, பட்டரும், 'நாம் ஸ்ரீரங்க₃ராஜபட்டர்; வேத₃ாந்திகளுடனே தர்க் கிக்கப் போகிறோம்; என்ன, அந்த ப்₃ராஹ்மணர்கள் சொன்ன படி :— "நீர் இப்படி ஸம்ப்₄ரமத்துடனே எழுந்தருளினால், வேத₃ாந்திகளை உமக்குக் காணப்போகாது காணும்; அவர் க்₃ருஹத்துக்குள்ளே இருந்துவிடுவர்; அவருடைய ஶிஷ்ய ப்ரஶிஷ் யர்கள் தலைவாசலிலேயிருந்து வந்த வித்₃வான்களுடனே நாலாறு மாஸம் தர்க்கித்து அவர்களை உள்ளே புகுரவொட்டாதே புறம்பே தள்ளிவிடுவர்கள்' என்ன, பட்டரும் அந்த ப்₃ராஹ்மணரைப் பார்த்து 'ஆகில் நாம் நேரே சென்று அவர் க்₃ருஹத்திலே புகுந்து வேத₃ாந்திகளைக் காணும் விரகு என்?' என்று கேட்டருள, அவர்கள் சொன்னபடி :— வேத₃ாந்திகள் த₄நவானாகையாலே அவாரியாக ப்ராஹ்மணருக்கு ஸத்ரபோ₄ஜநமிடுவர்; அந்த ஸத்ர பு₄க்₃ப்₃ராஹ்மணரோடே கலசி அவர்கள் வேஷத்தையும் தரித்துக் கொண்டு உள்ளே சென்றால் பு₄ஜிக்க வருகிற ப்₃ராஹ்மணரை நிரீக்ஷித்திருப்பர்; அங்கே வேத₃ாந்திகளைக் காணலாம்; ஆகை

யாலே உம்முடைய ஸம்ப்₄ரமங்களையெல்லாம் இங்கே நிறுத்தி நீரொருவருமே ஸத்ராஸிகளுடனே உள்ளே எழுந்தருளும்' என்று சொல்லிப்போனார்கள்.

அநந்தரம் பட்டரும், 'இவர்கள் சொன்னது கார்யமாம்' என்று திருவுள்ளம்பற்றி, தம்முடைய அனைத்துப் பரிகரத்தையும் ஊருக்குத் தூரத்திலே நிறுத்தி, தாம் சாத்தியிருந்த ஸர்வாப₄ரணங்களையும் களைந்து வைத்து ஒரு அரசிலைக் கல்லையைக் குத்தியிடுக்கிக் கொண்டு காவிவேஷ்டியும் த₄ரித்து ஒரு கமண்ட₃லமும் கையில் தூக்கிக்கொண்டு அநந்தாழ்வானும் தாமுமாய் ஸத்ராஸிகளுடனே கூடிக் கார்ப்பண்ய வேஷத்துடனே உள்ளே எழுந்தருள, வேத₃ாந்திகளும் ப்₃ராஹ்மணர் பு₄ஜிக்கையைப் பார்த்துக்கொண்டு ஒரு மண்டபத்திலே ஆறு ஆஸநமிட்டு அதன் மேலே பெரிய மதிப்புடனே இராநிற்க, ப்ராஹ்மணரெல்லாரும் ஸத்ரசாலையிலே புகுர, பட்டர் அங்கே எழுந்தருளாமல் வேத₃ாந்திகளை நோக்கி எழுந்தருள, வேத₃ாந்திகளும் "பிள்ளாய்! இங்கு ஏன் வருகிறீர்"? என்ன, பட்டரும் 'பி₄க்ஷைக்கு வருகிறேன்' என்ன, 'எல்லாரும் பு₄ஜிக்கிறவிடத்திலே போகீர் பி₄க்ஷைக்கு' என்ன, பட்டரும் 'எனக்குச் சோற்றுபி₄க்ஷையன்று' என்ன, வேத₃ாந்திகளும் 'இவர் ஸத்ராஸியானாலும் கிஞ்சித்₃ வித்₃வானாகக் கூடும்' என்று விசாரித்து 'காபி₄க்ஷா?' என்ன, பட்டரும் "தர்க்கபி₄க்ஷா" என்ன, வேத₃ாந்திகள் இத்தைக்கேட்டுத் திடுக்கிட்டு, 'முன்னே தீர்த்த₂வாஸி ப்₃ராஹ்மணன் வந்து நமக்குச் சொன்ன பட்டரல்லது நம் முன்னே வந்து கூசாமல் நின்று தர்க்கபி₄க்ஷையென்று கேட்க வல்லவர் இந்த லோகத்திலொருவருமில்லை; வேஷம் கார்ப்பண்யமாயிருந்ததேயாகிலும் இவர் பட்டராகவேணும்' என்று நிஸ்சயித்து, 'நம்மைத் தர்க்கபி₄க்ஷை கேட்டீர்; நீர் பட்டரோ' என்ன, இவரும் 'ஆம்' என்று கமண்ட₃லம் கல்லை காவி வேஷ்டி இவற்றையெல்லாம் சுருட்டியெறிந்து எழுந்தருளியிருந்து மஹாவேக₃மாக உபந்யஸிக்க, அவ்வளவிலே வேத₃ாந்திகளும் பட்டர் வைப₄வங் கேட்டிருந்தும் 'இவர் வித்₃யாமாஹாத்ம்யம் காணவேணும்' என்று இவருடனே தர்க்கிக்க, இப்படி ஒருவர்க்கொருவர் மத்தவாரணம் பிணங்குமாபோலே தர்க்கிக்க, இங்ஙனே ஒன்பது நாள் சென்ற பின்பு பத்தாம் நாள் பட்டர் தர்க்கிக்கச் செய்தே மாயிஸித்₃தா₄ந்தத்தை ஶததா₄வாகக்க₂ண்டி₃த்து விஸிஷ்டாத்₃வைதபரமாக உபந்யஸிக்க. இதைக்கண்ட வேத₃ாந்திகள் எழுந்திருந்து நின்று நடுங்கி வேறொன்றுஞ் சொல்லாதே 'மநுஷ்யமாத்ரமேயென்றிருத்

தேன்; நம்பெருமாளென்ன நீரென்ன பே4த3மில்லை; உறங்கும் பெருமாள் அவர், உலாவும் பெருமாள் நீர்; ஆனபின்பு வாய் திறந்து ஒரு வார்த்தை சொல்லக் கூடாது' என்று அரைகுலையத் தலைகுலையவந்து பட்டர் திருவடிகளிலே அடைவுகெட விழுந்து ஸேவித்து 'அடியேனை இரங்கியருளவேணும்' என்று மிகவும் அநுவர்த்திக்க, பட்டரும், தாம் எழுந்தருளின கார்யம் அதிஶீக்4ரமாகப் ப2லித்தவாறே, மிகவுந் திருவுள்ளமுகந்தருளி வேதா3ந்திகளை அங்கீ3கரித்தருளி, அவருக்கு

அர்த்த2 பஞ்சகதத்வஜ்ஞா: பஞ்சஸம்ஸ்காரஸம்ஸ்க்ருதா: |
ஆகாரத்ரயஸம்பந்நா மஹாபா4கவதாஸ் ஸ்ம்ருதா: ||

[(ப்ராப்யஸ்வரூபம் முதலிய) அர்த்த பஞ்சகத்தின் தத்துவத்தை அறிந்தவர்களாய், (தாபம் முதலிய) பஞ்சஸம்ஸ்காரத்தால் ஸம்ஸ்கரிக்கப் பெற்றவர்களாய், (அநந்யார்ஹஶேஷத்வம், அநந்ய ஶரணத்வம், அநந்யபோக்யத்வம் என்னும்) மூன்று தன்மைகளை உடையவர்கள் மஹாபாகவதர்கள் எனப்படுகின்றனர்.] என்று சொல்லப்பட்ட தாபபுண்ட்3ராதி3 பஞ்சஸம்ஸ்காரங்களையும் ப்ரஸாதி3த்து அர்த்தபஞ்சகஜ்ஞானத்தையுமுண்டாக்கி, ஆகாரத்ரயஸம்பந்நரான மஹாபாகவதோத்தமராக்கி விஶேஷகடாக்ஷஞ் செய்தருளி, 'வேதா3ந்திகளே! நீர் ஸர்வஜ்ஞராயிருந்தீர்; ஆகையாலே, நாம் உமக்குப் பரக்கச் சொல்லலாவதொன்றுமில்லை; விஶிஷ்டாத்3வைதமே பொருள்; நீர் மாயாவாத3ரீதியை ஸவாஸநமாக த்யஜித்து, ஶ்ரிய:பதியைப்பற்றி ஸ்ரீராமாநுஜ ஸித்3தா4ந்தத்தையே நிர்வஹித்துப்போரும், என்று அருளிச்செய்து, ஆழ்வார்கள் அருளிச்செயல் நாலாயிரமும் ஓதும்படி நியமித்தருளி, 'இனி நாம் நம்பெருமாளை ஸேவிக்கப் போகிறோம்' என்று உத்3யோகி3த்துப் புறப்பட்டவளவிலே, ஊருக்குப் புறம்பே நிறுத்தின அனைத்துப் பரிகரமும் ஊரிலே வந்து அவர்கள் மஹாஸம்ப்4ரமத்துடனே பட்டரைச் சூழ்ந்து ஸேவித்து மணிப் பல்லக்கிலேயேற்றி உப4ய சாமர தாலவ்ருந்தாதி3கள் பரிமாற, ஸகலவாத்3யங்களும் முழங்க, திருச்சின்னம் பணிமாறிப் புறப்படக்கண்டு, வேதா3ந்திகள் பட்டருடைய பெருமையையும் ஸம்பத்தையும் நன்றாகக் கண் குளிர நோக்கி "இந்த ஸ்ரீமான் இத்தனைதூரம் காடும் மலையும் கஷ்டமுங் கடந்து எழுந்தருளி, நித்யஸம்ஸாரிகளிலுங் கடைகெட்டு ம்ருஷாவாதி3யாயிருந்த அடியேனுடைய து3ர்க3தியே பற்றாசாக அங்கீகரித்தருளுவதே!' என்று மிகவும் வித்3த4ராய்,

கண்ணும் கண்ணீருமாய்க் கொண்டு பட்டர் திருவடிகளிலே
விழுந்து க்லேஶித்து "பெரியபெருமாள்தாமான தன்மையாய்
ஸௌந்த3ர்ய ஸௌகுமார்யாதி3களையுடையராய் எழுந்தருளின
தேவரீர் 'அநாதி3 காலம் தப்பித்திரிந்து அலம்புரிந்த நெடுந்
தடக்கைக்கும் எட்டாதபடி கைகழிந்துபோன இவ்வாத்மா இன்
னுந் தப்பிப்போம்' என்று திருவுள்ளம்பற்றியருளி. இப்படி அதி
கார்ப்பண்யமாயிருப்பதொரு வேஷத்தையும் த4ரித்துக்கொண்டு
ஸத்ராஶிகளுடனே கூட எழுந்தருளி, அதிது3ர்மாநியான அடி
யேனை அங்கீ3கரித்தருளின அந்த வேஷத்தை நினைத்தால் அடி
யேனுக்குப் பொறுக்கப்போகிறதில்லை" என்று சொல்லி வாய்
விட்டழுது கொண்டு திருவடிகளிலே விழுந்துகிடக்க, பட்டரும்
வேத3ாந்திகளை முடிபிடித்தெடுத்து நிறுத்தித் தேற்றி 'நீர் இங்கே
ததீ3யாராத4நைகபரராய் ஸுக2மேயிரும்' என்று அருளிச்செய்து
கோயிலை நோக்கிப் புறப்பட்டு எழுந்தருளாநிற்க. 'மின்னுமா
முகில்மேவு தண்டிருவேங்கடம்" என்கிறபடியே அம்பு3த4ரசும்பி3
யது3பூ4த4ரஶ்ருங்க3நிலயனுன நரஸிம்ஹதி3வ்யவிமாநம் தூரத்
திலே தோன்றக்கண்டு அஞ்ஜலித்துப் பின்னையும் திருநாராயண
புரம் வழியாக எழுந்தருளி, அநந்தாழ்வான் முன்னிலையாக நய
நம் நாரஸிம்ஹம் கி3ரிபரிப்3ருட4ஸ்த2ாநம் ஸீதாரண்யம் ஜ்ஞா
நாஶ்வத்த2மாகிற பஞ்சப4ாக3வத ஸ்த2லம் ஶ்வேதம்ருத் பரித4ாந
சிலை ஆகிற ஸப்தக்ஷேத்ரங்களையும், வேத3புஷ்கரிணி த3ர்ப்ப4
தீர்த்த2ம் பலாஶதீர்த்த2ம் பத்3மதீர்த்த2ம் யாத3வ மஹாநதி3
வைகுண்ட2 க2ங்க3ா தீர்த்த2ம் நாராயண தீர்த்த2ம் மைத்ரேய
குண்ட3 தீர்த்த2ங்களையும் ஸேவித்து அவக3ாஹித்து, இவற்றின்
மத்4யக3தமான திருக்கல்யாணியிலே நீராடி, கேஶவாதி3த்3வாத3
ஶோர்த்4வ புண்ட்3ரத4ரராய் முன்புபோலே ஸேவாக்ரமந்தப்பா
மல் ஸேவித்துத் தீர்த்த2ப்ரஸாத3ங்களும் பெற்றுப் புறப்பட்டுத்
திருமலையிறங்கி எழுந்தருளி, சிறுப்புத்தூரிலே அநந்தாழ்வானை
நிறுத்தி, பயணக3தியிலே த்வரித்துக் கோயிலுக்கு எழுந்தருளி,
திருக்காவேரியிலே நீராடியருளி த்3வாத3ஶோர்த்4வபுண்ட்3ரத4ர
ராய், ஸகலபரிஜநபரிச்ச2த3ங்களோடே 'வேத3ாந்தாசார்ய பட்டர்
வந்தார். வேத3ாந்திகளைவென்ற விரகர் வந்தார்' என்று திருச்
சின்னம் பணியாற, அணியரங்கன் திருமுற்றத்தடியார் எதிர்
கொள்ள எழுந்தருளி, ஸேவாக்ரமந் தப்பாமல் ஸேவித்துக்
கொண்டு உள்ளே புகுந்து மாயோனை மணத்தூணேபற்றி நின்று
வாயார வாழ்த்தி நிற்க, பெருமாளும் பெரிய ப்ரீதியோடே திரு
மாலை திருப்பரியட்டம் தீர்த்த2ம் [illegible]ட2கோபனும் ப்ரஸாதி3த்துத்

திருமாளிகையிலே போகவிட்டருள, ப4ட்டரும் தம் திருமாளிகையிலே எழுந்தருளி, அங்கே ஆண்டாளை ஸேவித்து ஸ்ரீபாத3த்து முதலிகளுக்கு த3ர்ஶநார்த்த2ம் நிர்வஹித்துக்கொண்டு எழுந்தருளியிருந்தார்.

அநந்தரம், அங்கே கங்கோரையிலே வேதா3ந்திகள் திருமாலடியார்களைப் பூசித்துக்கொண்டிருக்கும் நாளிலே இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் இளைத்து வேதா3ந்திகள் திருமாளிகைக்கு எழுந்தருளி 'க்ஷுத்து நலியா நின்றது' என்று அமுது செய்யத் தேட, வேதா3ந்திகள் தே3விகளிருவரும் பார்த்து 'உங்கள் வேதா3ந்திகள் தீர்த்த2மாடப் போனார்; இங்கு ஒன்றுமில்லை; நீங்கள் அங்கேறப் போங்கோள் என்று சொல்லி உதா3ஸீநம் பண்ணிவிட, அந்த ஸ்ரீவைஷ்ணவர்களும் வேதா3ந்திகள் பக்கல் சென்று இத்தை அறிவிக்க; அவரும் அதுகேட்டு அநுதபித்துத் தம் திருமாளிகையிலே எழுந்தருளித் தேவிகளிருவரையுஞ்சீறி அப்போதே புறப்பட்டுக் கோயிலுக்கு எழுந்தருளத் தேட, அங்குள்ளவர்கள் வேதா3ந்திகளைப் போகவொண்ணாதென்றுதகைய. இவரும் தமக்கு நிரவதி4கத4நமுண்டாகையாலே அத்தை மூன்று அம்ஶமாகப் பிரித்து இரண்டு தே3விகளுக்கும் இரண்டு அம்ஶம் கொடுத்து மற்றையம்ஶத்தை ஸ்வாசார்யருக்காக எடுப்பித்துக் கொண்டு அத்தே3ஶத்தையும் ஸவாஸநமாகவிட்டு, ''இல்லற மல்லேல் துறவறம்'' என்று 'அதிதி2ஸத்கார யோக்3யையல்லாத பா4ர்யையை த்யஜித்து ஸந்ந்யஸிக்கக்கடவன்' என்று ஶாஸ்த்ரம் சொல்லுகையாலே ஸர்வஸங்க3பரித்யாக3 பூர்வகமாக அங்கே ஸந்ந்யஸித்தருளிக் கோயிலை நோக்கி எழுந்தருளா நிற்கச் செய்தே திருக்காவேரிக் கரையிலுள்ள சிறுப்புத் தூரிலே அநந்தாழ்வானைக் கண்டு ஸேவித்து நிற்க, அநந்தாழ்வானும் 'வாரீர் வேதா3ந்திகளே! ஸுகுமாரரான நீர் இங்ஙனே செய்யலாமோ? வேர்த்தபோது நீராடிப் பசித்தபோது அமுது செய்து பட்டர் திருவடிகளே ஶரணமென்றிருந்தால், உம்மைப் பரமபத3த்தினின்றும் தள்ளிவிடுவாருண்டோ? இனியென்! திருமந்த்ரத்திலே பிறந்து த்3வயத்திலே வளர்ந்து த்3வயைகநிஷ்ட2ராவீர்' என்று ஆஶீர்வதி3த்து, 'போம்' என்று விட்டார்; அதாவது திருமந்த்ரம் ஆத்மஸ்வரூப பரமாகையாலே ஶேஷத்வ ஜ்ஞாநோத்பத்தியாகிற ஆபி4ஜாத்யமுண்டாய், த்3வயத்திலும் ஸ்ரீமச்ச2ப்3தோ3க்தமான பெரிய பிராட்டியார் புருஷகாரத்தாலே வர்த்தமாநார்த்த2த்திலே வர்த்தித்து, உத்தரவாக்யோக்தங்களைப் பற்றக் கைங்கர்யைக நிஷ்ட2ராவீரென்று சொன்னபடி.

வேதாந்திகளும் பயணகு3தியிலே போய்க் கோயிலிலே எழுந்தருளி பட்டர் திருவடிகளிலே ஸேவித்து, தாம் கொண்டு வந்த த4நத்தைத் தம்மதென்கிற அபி4மாநத்தை விட்டு பட்டருக்கு இஷ்ட விநியோகா3ர்ஹமாம்படி அவர் திருவடிகளிலே ஸமர்ப்பித்து நிர்மமராய் நிற்க, அவ்வளவிலே பட்டரும் மிகவும் உகந்தருளி 'நம்முடைய சீயர் வந்தார்' என்று வாரியெடுத்துக் கட்டிக் கொண்டருளி. ஒரு க்ஷணமும் பிரியாமல் தம்முடைய ஸந்நிதி4யிலே வைத்துக் கொண்டு ஸகலார்த்த2ங்களையும் ப்ரஸாதி3த்தருள, சீயரும் பட்டரையல்லது மற்றொரு தெய்வம் அறியாதிருந்தார்

பட்டரும் நம்முடைய சீயரென்று சொல்லி அணைத்துக் கொண்ட அன்று தொடங்கி வேதா3ந்திகளுக்கு 'நஞ்சீயர்' என்று திருநாமமுண்டாய்த்து.

நஞ்சீயர் பட்டரைப் பார்த்து, 'பெருமாள் சந்த்3ரபுஷ்கரிணிக் கரையிலே கண்வளர்ந்தருளுகிறதற்குத் திருவுள்ளக் கருத்து என்?' என்று விண்ணப்பஞ்செய்ய, பட்டரும் '''நாராயணாவோ! மணிவண்ணா! நாகணையாய்!' என்று கூப்பிட்டபின்பிறே அந்த மடுவின் கரையிலே எழுந்தருளினது; இங்கு கண் வளர்ந்தருளுகிறது நான் கூப்பிடுவதற்கு முன்னே என்னை எடுக்கைக்காக, நான் அகப்பட்ட பொய்கைக் கரையிலே ஏற்கவே வந்து கண் வளர்ந்தருளுகிறானித்தனை; நீர் இவ்வர்த்த2ம் கேட்டது, உம்முடைய வசத்தாலேயன்று காணும்; உம்மைக்கொண்டு நம்பெருமாள் என்னினைவை வெளியிட்டருளினார்'' என்று அருளிச்செய்தார்; அதாவது — பு4கு3வத3வதாரங்களடங்க ஸ்வார்த்த2மாக என்றிறே ஜ்ஞாநாதி4கர் அநுஸந்தி4ப்பரென்றபடி.

நஞ்சீயர் பட்டரை ஸ்ரீபாத3ந் தாங்குவதாகத் தோளிலே தண்டை வைக்கப்புக, பட்டரும் 'உம்முடைய வேஷத்திற்கு இது விருத்3த4ங்காணும்' என்று அருளிச்செய்ய, சீயரும் 'அங்குத்தையடிமைக்கு ஏகாந்தமென்று இவ்வேஷத்தைப் பரிக்3ரஹம் பண்ணினேன்; அதுதானே இதற்கு விரோத4மாகில் பழைய வெள்ளையையுடுக்கிறேன்' என்று விண்ணப்பஞ்செய்தார்; அதாவது—ஆசார்ய கைங்கர்யத்திற்கு அநுருபமாகாத வர்ணாஸ்ரம த4ர்மமும் பரித்யாஜ்யமென்றபடி.

பட்டர் குடும்ப ஸஹிதமாகக் கூரகுலோத்தமனிலே எழுந்தருளியிருக்கிறவளவிலே திருநந்தவநத்தில் அல்பம் உபஹதியுண்டாக, திருநந்தவநஞ் செய்கிற ஏகாங்கிகள் சில வார்த்தைகள் சொன்னார்களென்று நஞ்சீயர் கேட்டருளி, ஏகாங்கிகளையழைத்து 'நம் பெருமாள் திருக்குழற்கற்றை சிக்கு நாறுகிறதென்றோ நான் திருநந்தவநஞ் செய்கிறது? பட்டருடைய குடும்பத்திற்கு இஷ்ட விநியோகார்ஹமாக வேணுமென்று திருநந்தவநவ்யாஜேந கோலினேனித்தனையன்றோ!' என்று அவர்களைச் சீறி விட்டருளினார். இத்தால், ஆசார்ய பரதந்த்ரன் ப$_{4}$க$_{3}$வத் கைங்கர்யம் பண்ணக்கோலுவதும் ஆசார்ய கைங்கர்யார்த்த$_{2}$மாகவித்தனை என்று கருத்து.

அநந்தரம் பட்டர் திருவணையாட எழுந்தருளுகிறபோது, பகலெல்லாம் வழி நடந்தருளின ஆயாஸத்தாலே விட்டதொரு தூற்றடியிலே நஞ்சீயர் மடியிலே திருமுடியை வைத்துக் கண் வளர்ந்தருள, ஓரிரவெல்லாம் துடைமாறுடுதல் அசைத்தல் செய்யாதே இருந்தருளினார்; ஆகையாலே, ஆசார்ய விஷயத்திலே சைதந்யம் மூச்சற்றுப் படுக்கையாய் அடிமை செய்கை ஶிஷ்யஸ்வரூபஸித்$_{3}$தி$_{4}$யென்கிறது.

திருவணையாடி மீண்டு எழுந்தருளுகிறபோது ஸாயங்காலமானவாறே பாதிரியென்கிற க்$_{3}$ராமத்திலே போய் ஒரு வேடனகத்தே எழுந்தருளப்புக்கவாறே, அவனும் தானிருந்த ஆஸநத்தையும் வாங்கிப்பொகட்டு இவர்க்கு ஒரு கட்டிலை அமைத்துக்கொடுக்க, அதின் மேலே எழுந்தருளியிருந்து 'இவன் நம்முடைய வைப$_{4}$வமறிந்து செய்தானல்லன்; க்$_{2}$யாதிபரனாய்ச் செய்தானல்லன்; நம்மால் உபக்ருதனாய்ச் செய்தானல்லன்; தன்னுடைய க்$_{3}$ருஹத்திலே புகுந்தோமென்னும் அபி$_{4}$மாநமிறே இவன் இவ்வளவு செய்ய வேண்டிற்று. ஈஶ்வரன் தன் அபி$_{4}$மானத்திலே ஒதுங்கினாரை என்ன நினைத்திருக்கிறானோ?' என்று அநுஸந்தி$_{4}$த்தருளி, பின்பு அந்தக்$_{3}$ருஹமுடையவனைக் குறித்து 'இங்கு விஶேஷம் ஏது?' என்று கேட்டருள, அவனும் 'நாயன்தே! நான் காட்டிலே வேட்டைக்குப் போனேன்; அங்கே ஒரு முசல் குட்டியைப் பிடித்தேன்; அதனுடைய தாயானது என் முன்னே வந்து வழியிலே எதிரே கும்பிட்டுக்கொண்டு கிடந்தது; அத்தைக்கண்டு எனக்கு தயை பிறந்து அதின் குட்டியை விட்டுப் போந்தேன்' என்றான், அத்தைக்கேட்டு இவரும் 'ஒரு சேதநனுக்கு இல்லாததொன்று, பரமசேதநனுக்கு உள்ளதொன்று!

ஸர்வத₄ர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ ।
அஹம் த்வா ஸர்வபாபேப்₄யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச: ॥
[கீதா சரம ஶ்லோகம்]

[(ப₂ல ஸாத₄னமான) எல்லா த₄ர்மங்களையும், வாஸனையுடன் விட்டு, என்னை ஒருவனையே உபாயமாக அடை; நான் உன்னை எல்லாப் பாபங்களினின்றும் விடுவிக்கிறேன்; துக்கிக்காதே.] என்று அம்முசலுக்கு உபதே₃ஶித்தாருமில்லை;

ஆர்த்தோ வா யதி₃ வா த்₃ருப்த: பரேஷாம் ஶரணாக₃த: ।
அரி: ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய: க்ருதாத்மநா ॥
[ரா. யு. 18-28]

[பயந்தவனாகவோ, பயமற்றவனாகவோ, எதிரிகளுக்குள் ஒருவன் ஶரணமடைந்துவிட்டானாகில், அவ்வெதிரி, நன்னெஞ்சையுடையவனால் ப்ராணனைவிட்டும் ரக்ஷிக்கப்படவேண்டும்.] என்று இவ்வேடனுக்கு உபதே₃ஶித்தாருமில்லை; அவ்யவத₄ாநேந ஶரணாக₃தி ப₂லிப்பதே! இதொரு ப்ரமாணஸித்₃தி₄ இருந்தபடியே!' என்று நஞ்சீயர்க்கு அருளிச்செய்து, கோயிலுக்கு எழுந்தருளிப் பூர்வம் போலே வ்யாக்₂யாநித்துக்கொண்டு எழுந்தருளியிருந்தார்.

அக்காலத்திலே வீரஸுந்த₃ரப்₃ரஹ்மராயன் பெருமாளுக்குத் திருமதிள் கட்டுவிக்கிற நேரிலே பிள்ளைப்பிள்ளையாழ்வான் திருமாளிகை யகப்பட, 'அவர் திருமாளிகையை இடித்துத் திருமதிள் கட்டவேணும்' என்று வீர ஸுந்த₃ரன் சொல்ல, பட்டரும் 'உம் திருமதிளோ பெருமாளுக்கு ரக்ஷகம்? அவர் மங்க₃ளாஶாஸநமிறே ரக்ஷகம்; ஆகையாலே, திருமங்கையாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலை கட்டுகிற ஸ்த₂ாநத்தைத் தப்ப ஒதுங்கத் திருமதிள் கட்டவில்லையோ? நீரும் இப்போதும் அப்படியே அவர் திருமாளிகையைவிட்டு ஒதுங்கத் திருமதிள் கட்டி வையும்' என்று சொல்ல, வீரஸுந்த₃ரனும் ஆசார்ய புத்ரரென்று அஞ்சாதே அவர் வார்த்தையை அதிக்ரமித்து ஆழ்வான் திருமாளிகையை இடித்துத் திருமதிள் கட்டிவைத்து, பட்டரைத் தந்மூலமாகக் கோயிலிலேயிருக்கவுமொட்டாதே மிகவும் உபத்₃ரவிக்க, பட்டர் கோயிலினின்றும் புறப்பட்டுத் திருக்கோட்டியூருக்கு எழுந்தருளும்போது வழியிலே இளைத்தருளி 'நஞ்சீயர் இப்போது வருவதுங் காணேன்' என்ன—, நஞ்சீயரும் சீயா! சீயா! என்று அழைத்துக் கொண்டு கட்டுத்திருப்போனகமும் தண்ணீரமுதும் கொண்டு ஓடி வந்து சடக்கென அமுது செய்யப் பண்ணி வைத்து இளைப்பாற்றி

வைக்க, பட்டரும் நஞ்சீயருக்கு அப்போதும் ஒரு விமேஷகடாக்ஷஞ் செய்தருளினர்; ஆகையாலே, அநுவர்த்தந விமேஷங்களாலே ஆசார்யாநுக்$_3$ரஹத்திற்குப் பாத்ரமாக வேணுமிறே.

அநந்தரம் திருக்கோட்டியூரிலே எழுந்தருளியிருந்து

பூகீ$_3$கண்ட$_2$ த்$_3$வயஸஸரஸஸ்நிக்$_3$த$_4$ நீரோபகண்ட$_2$ாம்
ஆவிர்மோத$_3$ ஸ்திமிதஶகுநாநூதி$_3$தப்$_3$ரஹ்மகே$_4$ாஷாம் |
மார்க்கே$_3$ மார்க்கே$_3$ பதி$_2$கநிவஹைருஞ்ச்யமாநாபவர்க்க$_3$ாம்
பஶ்யேயம் தாம் புநரபி புரீம் ஶ்ரீமதீம் ரங்க$_3$த$_4$ாம்ந: ||
[ஸ்ரீரங்கநாத ஸ்தோத்ரம்]

[பாக்கு மரங்களின் கழுத்தளவாகப் பெருகுகின்றதும், தேனோடு கூடியதும், ஸ்நேஹமுடையதுமான தீர்த்தத்தை அருகில் உடையதாய், மகிழ்ச்சியினால் அசையாமலிருக்கும் பறவைகளினால் திருப்பிச் சொல்லப்பட்ட வேத கோஷத்தையுடையதாய். வழி நடப்பவர்களின் கூட்டங்களால் வழிகள் தோறும் திரட்டி எடுத்துக் கொள்ளப்படுகிற மோக்ஷத்தை உடையதான ஸ்ரீரங்கநாதனுடைய அந்தக் கோயிலை (அடியேன்) மறுபடியும் ஸேவிக்கப்பெறுவேனோ?] என்று சொல்லிக்கொண்டு, கோயிலையும் பெருமாளையும் விட்டுப் பிரிந்திருக்கையாலே மிகவும் க்லேஶப்பட்டு 'என்றுகொலோ கண்குளிரக் காணுநாளே!' என்று கொண்டு எழுந்தருளியிருக்கிற காலத்திலே; ஒரு ஸ்ரீவைஷ்ணவர் பட்டரை ஸேவித்து 'அடியேனுக்குத் திருவிருத்தத்திற்கு அர்த்த$_2$ம் ஓருரு ப்ரஸாதி$_3$த்தருள வேணும்' என்று மிகவும் அநுவர்த்திக்க, பட்டரும் நஞ்சீயரைப் பார்த்து 'சீயா! எனக்குக் கோயிலையும், பெருமாளையும் விட்டுப்பிரிந்த க்லேஶாதிஶயேந செவிகள் சீப்பாயா நின்றது; ஆகையாலே, எனக்கு வாய்திறந்து வார்த்தை சொல்லப் போகிறதில்லை; நீர் திருவிருத்தத்திற்கு அர்த்த$_2$ம் ஓருரு இந்த ஸ்ரீவைஷ்ணவருக்குச் சொல்லும்' என்று அவரைச் சீயர் ஸ்ரீபாத$_3$த்திலே காட்டிக்கொடுத்து இங்ஙனே நடந்து செல்லுகிற நாளிலே, கடலைக் கலக்கினாற்போலே பட்டர் திருவுள்ளத்தைக் கலக்கி விரோதி$_4$த்த வீரஸுந்த$_3$ரன் மரித்துப்போக,

அவ்வளவிலே கோயிலிலே பட்டர் திருத்தாயார் ஆண்டாளை ஸேவித்திருந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் 'பட்டருடைய விரோதி$_4$ போனான்' என்று தங்கள் திருப்பரியட்டங்களை முடிந்து ஆகாஶத்திலேயெறிந்து, நின்றார் நின்ற தி$_3$க்கிலே ஸந்தோஷித்துக் கூத்தாடி ஆண்டாளுக்கு அறிவிக்க, அதுகேட்டு ஆண்டாள்

செய்தபடி:—திருமாளிகைக்குள்ளே புகுந்து திருக்காப்புச்சாத்திச் சிக்கெனத் தாளிட்டுக் கொண்டு வயிறுபிடித்து மிகவுங் க்லேஶித்து வாய்விட்டு உச்சைஸ் ஸ்வரமாக அழத் தொடங்கினாள்; அது கேட்டு ஸந்தோஷாதிஶயேந தடுகுட்டமாய்க் கும்பிடு நட்ட மிட்டுக் கூத்தாடுகிற முதலிகள் ஆண்டாளைக் குறித்து 'பட்டரை இங்கு இருக்கவுங்கூட வொட்டாமல் விரோதி$_4$த்த பாபிஷ்ட$_2$ன் போனானென்று ஸந்தோஷியாதே க்லேஶிப்பானென்? பட்ட ருடைய விரோதி$_4$ போகவும் பட்டரும் முதலிகளும் இங்கே எழுந் தருளவும், நாமெல்லோரும் கூடிவாழவும், உமக்கு அஸஹ்யமா யிருந்ததோ?' என்ன, ஆண்டாளும் ஸ்ரீவைஷ்ணவர்களைக் குறித்து அருளிச்செய்தபடி :—''பிள்ளைகாள்! நீங்களொன்றும் அறிகிறீ கோளில்லை; வீரஸுந்த$_3$ரன் நேரே ஆழ்வானுடைய ஶிஷ்யனா யிருந்து ஆசார்ய புத்ரரான பட்டரைத் திண்டாட்டங்கண்டு அவர் திறத்திலே மஹாபராத$_4$த்தைத் தீரக்கழியப்பண்ணி 'அறி யாமல் செய்தேன்; இத்தைப் பொறுத்தருளவேணும்' என்று பட்டர் திருவடிகளிலே தலைசாய்ப்பதுஞ் செய்யாதே, இப்படி செய்தோமே! என்கிற அநுதாபமுமின்றியே செத்துப்போனான்; ஆகையாலே, அவன் ஶரீரம் விட்டபோதே யமப$_4$டர் கையிலே யகப்பட்டுக் கலங்க அடியுண்டு மலங்க விழிக்குமாகையாலே அத்$_3$ருஷ்டத்தையிழந்தான்; சில நாளைக்கு இருந்தாகிலும் த்$_3$ருஷ்டஸுக$_2$த்தை அநுப$_4$விக்கிறானென்றிருந்தேன்; அதுவுங் கூட இழந்தானாகாதே? ஆழ்வான் திருவடிகளில் ஸம்ப$_3$ந்த$_4$ முடையது ஒரு ஆத்மா இப்படி தட்டுப்பட்டுப்போவதே! என்று இத்தை நினைத்து என் வயிறு எரிகிறபடி உங்களொருவர்க்கும் தெரிகிறதில்லை'' என்று ஆண்டாள் அருளிச்செய்தாள்; குற்றஞ் செய்தவர்கள் பக்கலிலுமகப்பட ஹிதபரராய் த$_4$யார்த்$_3$ரசித்த ராய்ப் போருவது, ஆழ்வான் ஸம்ப$_3$ந்த$_4$முடையவர்களுக்கே உள்ளதொன்றிறே.

கோயிலிலும் பிள்ளைப்பிள்ளையாழ்வான் இவ்விஶேஷங்கேட்டுத் திருக்கோட்டியூருக்கு எழுந்தருளி இத்தை அருளிச்செய்ய, பட்ட ரும் கேட்டு ஸந்துஷ்டராய் ''நுங்கால்களென் தலைமேற் கெழு மீரோநுமரோடே'' என்கிறபடியே அவர்கழல்களை அடிக்கடி வணங்கி, அவருடனே கூடத் தத்க்ஷணமே கோ$_3$ஷ்டீ$_2$புரத்திலும் புறப்பட்டுக் கோயிலேற எழுந்தருளி, பண்டுபோலே த$_3$ர்ஶநார்த் த$_2$ம் நிர்வஹித்துக் கொண்டிருந்தார்.

அம்மணியாழ்வான் இருநூறுகாதவழி நடந்து வந்து, பட்டர் ஸ்ரீபாதத்திலே தண்டன் ஸமர்ப்பித்து 'அடியேனுக்குத் தஞ்சமாயிருப்பதொரு அர்த்தம் ப்ரஸாதித்தருளவேணும்' என்று ப்ரார்த்திக்க, பட்டரும் நெடுமாற்கடிமைக்கு அர்த்தம் ப்ரஸாதித்தருளி, 'எம்பெருமானை அறிகையாவது—அவனை அரைவயிறு பட்டறிகை; ததீயரை அறிகையாவது—அவனை முழுக்க அறிகை' என்று அருளிச் செய்தருள, அவரும் 'பலபடி சொல்லியென்? மறப்பன்; இவ்வளவேயமையும்' என்று அது தன்னையே தாரகமாகப் பண்ணிக்கொண்டு எழுந்தருளினார்;

ந்யக்ரோதபீஜே வடவத் ப்ரணவே ஶப்தஜாலவத் ।
ஸித்தே ததீயஶேஷத்வே ஸர்வார்த்தாஸ் ஸம்பவந்தி ஹி ॥

[ஆலம் விதையில் ஆலமரம் போலவும், ப்ரணவத்தில் எல்லா ஶப்தங்கள் போலவும் பாகவத ஶேஷத்வம் ஸித்தித்தால் (அதில் அடங்கிய) எல்லாப் பொருள்களும் கிடைத்தனவாகின்றன.] என்கையாலே ஸச்சிஷ்யன் ஸதாசார்யன் அருளிச்செய்ததொரு சரமார்த்தத்தையே தஞ்சமென்று விஶ்வஸிக்க வேணுமென்றபடி.

வீரஶிகாமணிப் பல்லவராயன், பட்டரைக் குறித்து 'பட்டரே! ராஜகார்யஞ் செய்கையாலே அடியேனுக்கு பகவத்விஷய வைபவங் கேட்க விரகில்லை; எனக்குத் தஞ்சமாயிருப்பதொரு அர்த்தம் ப்ரஸாதித்தருளவேணும்' என்று அபேக்ஷிக்க, பட்டரும் 'கடற்கரை வெளியை நினைத்திரும்' என்று அருளிச்செய்தருள, அது தெரியாமையாலே அவன் கையைப் பிசைந்து நிற்க, இவரும் 'கடற்கரையிலே ஒரு அம்ருதக் கடல்போலே பெருமாள் பெரிய வாநரஸேனையோடே விட்டிருக்க, அக்கரையிலே பிணந்தின்னிப் பையல் ராவணன் இருக்க, எழுபதுகோடி மஹாகபி ஸேநை உணர்ந்து பெருமாளைக் குறிக்கொண்டு நோக்கிக்கொண்டு போர, அவர்கள் ப்ரக்ருதிமான்களாகையாலே கண்ணுறங்கிக் காலோய்ந்து கைசோர்ந்தவளவிலே, தாமும் தம் திருத்தம்பியாருமாகத் திருவரையிற்கட்டிய கச்சும், சுருக்கிய சீராவும், நாணியும், முதுகிலே அம்பறாத்தூணிகட்டிக் கையிலே தெறித்துப்பிடித்துப் பெருக்கின திருச்சரமும், தரித்த திருவில்லும் தாமுமாய், சில அண்டஜங்கள் முட்டையிட்டுத் தம் சிறகின் கீழே நோக்கிட்டு வைக்குமாபோலே, எழுபது வெள்ளம் ப்லவங்கமகுல பதி மஹாஸேநையையும் நடையாடும் மதிள்கள்போலே ரக்ஷித்துக் கொண்டு ஓரிரவெல்லாம் சாரிகையாய் வந்த சக்ரவர்த்தித்

திருமகனுடைய கையும் வில்லுமே தஞ்சமென்று ஸுகமாயிரும்' என்று அருளினார்; தாத்பர்யரஹஸ்யமாவது — உறங்குகிறபோது நம்மை ரக்ஷிக்குமவன், உணர்ந்தால் நம்மை நோக்குமென்றிருக்கச் சொல்லவேண்டாவிறே யென்றபடி.

ஒருநாள் த்ரிபு₄வநவீரதே₃வராயன், பட்டருடைய வைப₄வங் கண்டு 'பட்டரே; நீர் நம்பக்கல் ஒருநாள் வந்து போகீர்' என்ன, பட்டரும் 'பெருமாள் அஞ்சலென்ற கை மறுத்தாலும், அவ்வாசலொழிய வேறொரு போக்கு உண்டோ?' என்று அருளினார்; அதாவது—

**ஸக்ருதே₃வ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே |**
**அப₄யம் ஸர்வபூ₄தேப்₄யோ த₃தா₃ம்யேதத் வ்ரதம் மம ||**
[ரா. யு. 18-33]

[ஒரு தடவை சரணமடைந்தவன் பொருட்டும், 'உனக்கே ஆகிறேன்' என்று பிரார்த்திப்பவன் பொருட்டும், எல்லாப் பிராணிகளிடத்தினின்றும் அபயமளிக்கிறேன். இது எனக்கு வ்ரதம்.] என்று ஸ்வாஶ்ரித ரக்ஷணைகதீ₃க்ஷிதனான எம்பெருமானிருக்க, கதிபய க்₃ராமேஶ கஶ்சித் புருஷாத₄மன் வாசலிலே துவளக்கடவோமல்லோ மென்றபடி.

ஒருநாள் பட்டர், பெருமாளைத் திருக்கைத்தலத்திலே எழுந்தருளியிருக்கச் செய்தே திருவடி தொழப்புக, திருமுன் அடிக்கிற வேத்ரபாணிகள் பட்டரைப் பாராமல் சில பருஷோக்திகளைச் சொல்ல, ஸ்ரீபாத₃த்தில் ஸ்ரீவைஷ்ணவர் அவரோடே எதிருத்தரஞ் சொல்லப்புக, பட்டரும் 'வாரீர் பிள்ளாய்! கேளும்; பெருமாளுக்கு ஏகாந்தத்திலே என் குற்றம் விண்ணப்பஞ்செய்ய ஒருகாலம் பற்றாதாய், பெருமாளும் திருச்செவி சாத்தாமல் போந்த இத்தைப் பெருமாளுக்கு அந்தரங்க₃ பரிகரமாயிருப்பாரொருவர் நம் தோ₃ஷத்தை ஏகாந்தத்திலே விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் திருச்செவி சாத்தினது கண்டால், நம்மைப் பார்க்கில் அத்தை விலக்குகிற இத்தால் நீர் பெற்றபேறு என்?' என்று அருளினார்; இத்தால், ப₄க₃வத் ஸந்நிதி₄யில் ஏகாந்தத்தில் பரக்ருத ஸ்வதோ₃ஷக்₂யாபநம் தத்₃வாத்ஸல்யகார்யமாய்த் தத₃ங்கீ₃காரஹேதுவுமாமென்று நினைக்கக்கடவனென்றபடி.

பட்டர் ஸ்ரீபாத₃த்தில் ஸம்ப₄ந்த₄முடையராய் ஸோமயாஜியாயிருப்பாரொரு ஸ்ரீவைஷ்ணவர் பட்டரை 'அடியேனுக்குத் திரு

வாராத4நக்ரமம் ப்ரஸாதி3த்தருளவேணும்' என்று விண்ணப்பஞ் செய்ய, பட்டரும் உடையவர் நித்யத்தை-ஒருயாமப்போது திருவாராத4நம் பண்ணவேண்டுங் க்ரமத்தை ப்ரஸாதி3த்தருள, அவரும் அதுகொண்டு நெடுநாள் திருவாராத4நம் பண்ணிப் போரச் செய்தே, ஒன்றிரண்டு நாள் பட்டர் திருவாராத4நத்தை ஸேவித்திருக்க, அங்குத் தமக்கு அருளிச்செய்த க்ரமம் ஒன்றும் கண்டிலர். பட்டர் திருவாராத4நஞ் செய்தபடி:— பட்டர் நீராடித் தூய திருப்பரியட்டஞ் சாத்தியருளித் திருமண்காப்புச் சாத்தியருளி, உள்ளே அமுதுசெய்யத் தளிகையை அமர்த்தின வளவிலே தளிகை முன்னே எழுந்தருளியிருந்து 'தெற்காழ்வாரை எழுந்தருளுவித்துக்கொண்டு வாருங்கோள்' என்ன, அவர்களும் அப்படியே எழுந்தருளுவித்துக் கொண்டு வந்து கைத்தலத்திலே பிடித்தவளவிலே, தமக்குப் படைத்த திருப்போனகத்தையும் சேர்த்த தண்ணீரமுதையும் அமுதுசெய்வித்தருளி ப்ரஸாத3ப்பட்டருளினர். அத்தைக்கண்டு ஸ்ரீவைஷ்ணவரும் பட்டரை த3ண்ட3னிட்டு ஸவிநயராய் 'ஒரு விண்ணப்பமுண்டு; சொல்ல பயமாயிருக்கிறது' என்று சொல்ல, பட்டரும் 'அஞ்சாதே சொல்லும்' என்ன, அந்த ஸ்ரீவைஷ்ணவரும் 'திருவாராத4நப்படியை அடியேனுக்கு இப்படி அருளிச்செய்தருளிற்று; தேவரீர் இப்படி செய்தருளுகிறது; இதற்கு அடியென்?' என்று விண்ணப்பஞ்செய்ய, பட்டரும் 'ஸகல ஶாஸ்த்ரங்களையும் ஆராய்ந்து பார்த்தவிடத்து உமக்கு அப்படியொழியச் சொல்லுகைக்கு ஒரு வார்த்தை கண்டிலேன்; என்னை நிருபித்தவிடத்தில் இப்படியொழியச் செய்கைக்கு ஒரு சொ(ய?)ல் கண்டிலேன்' என்று அருளிச்செய்தருளினர்; ஹிதைஷியான ஆசார்யன் ஶிஷ்யனுக்கு ஜ்ஞாநபரிபாகாநுகு3ணமாகக் கொண்டிப் பசுவுக்குத் தடிகட்டி விடுவாரைப்போலே ஶப்3த3ாதி3 விஷயங்களிலே மண்டித் திரிகிற கரணங்களை ப4க3வத்3விஷய ப்ரவணமாம்படி திருத்து மென்னுமதுவும், ஆசார்யனுடைய யத்நமாய் ப4க3வத்3 விஷயைகபரமான அநுஷ்டா3ந விஶேஷத்திற்குக் கருத்து அவிஶேஷஜ்ஞர்க்குத் தோற்றுதென்னுமதுவும் தோன்றுநின்றதிறே.

பட்டரை ஒருவன், 'தே₃வதாந்தரங்களை ஸ்ரீவைஷ்ணவர்கள் அநுவர்த்தியாதொழிவானென்?' என்ன, 'ப்ரமாண விரோத₄ முண்டாகிலன்றே ஸந்தே₃ஹமுள்ளது; இங்கே ஸந்தே₃ஹமில்லை' என்று அருளிச்செய்தார். அது எங்ஙனேயென்னில்:— 'ஸத்வ ப்ரசுரரை ரஜஸ்தம:ப்ரசுரர் அநுவர்த்திக்குமது போக்கி ஸத்வப்ர சுரர் ரஜஸ்தம:ப்ரசுரரை அநுவர்த்திக்கக்கடவதோ?' என்று அருளிச்செய்தார்; ஆகையாலே, தே₃வதாந்தரங்கள் கு₃ணதோ₃ஷங் களிரண்டாலும் ஒருகாலும் அநுவர்த்தநீயரன்றென்றபடி.

'பட்டர் அறியில் ஸம்மதியார்' என்று, பட்டர் ஸ்ரீபாத₃த்தை வேறொரு ஸ்ரீவைஷ்ணவர் திருக்கையாலே விளக்குவித்து, ஆண் டாள் ஸ்வீகரிப்பள். இத்தை ஒரு ஸ்ரீவைஷ்ணவர் கண்டு 'நீர் தாயாராயிருந்து இப்படி செய்தருளலாமோ?' என்ன, ஆண்டா ளும் 'அது என்? பிறர் திருவாராத₄நத்தின் தீர்த்த₂மே ஸ்வீகார்ய மாய், தான் ஏறியருளப் பண்ணின விக்₃ரஹத்தின் தீர்த்த₂ம் ஸ்வீகார்யமாகாதோ?' என்ன, அவரும் 'அதற்கு அடியென்?' என்று கேட்க, ஆண்டாளும் '*கணபுரம் கைதொழும் பிள்ளை யைப் பிள்ளையென்றெண்ணப் பெறுவரே?' என்று அருளிச்செய் தாள். இத்தால், ஶிஷ்ய புத்ரர்களேயாகிலும், ஜ்ஞாநாதி₄கர் ததீ₃யத்வேந அநுவர்த்தநீயரென்றபடி.

பட்டர் தம் ஸ்ரீபாத₃த்திலே ஸேவித்திருப்பார் ஒரு ஸ்ரீவைஷ்ண வரைப் பார்த்து 'நீர் அநந்தாழ்வான் ஸ்ரீபாத₃த்திலே சென்று ஸ்ரீவைஷ்ணவலக்ஷணமிருக்கும்படி எங்ஙனேயென்று கேட்டு வாரும்' என்று அருளிச்செய்ய, அவரும் அநந்தாழ்வான் ஸந் நிதி₄க்கு எழுந்தருள, அன்று அங்கே பல ஸ்ரீவைஷ்ணவர்கள் அமுது செய்தருள, இவரும் இடம் போதாமையாலே அவர்கள் அமுது செய்து எழுந்திருக்குமளவும் பேசாதிருக்க, பின்பு அநந் தாழ்வானும் இவரைக்கண்டு 'நெடும் போதுண்டே! அமுது செய் தருளப் பெற்றதில்லையே! இளைப்போடேயிருக்கிறதே!' என்று போர நொந்து சடக்கென அமுதுசெய்தருளப் பண்ணி, தாமும் தே₃விகளுமாக ஶேஷித்திருந்த திருப்போனகத்தை அமுது செய் தருளி எழுந்தருளியிருந்து, ஸ்ரீவைஷ்ணவரைக் குறித்து 'எங்கு நின்றும் எழுந்தருளிற்று?' என்று கேட்டருள, அவரும் 'பட்டர், தேவரீர் ஸ்ரீபாத₃த்திலே சென்று ஸ்ரீவைஷ்ணவலக்ஷணமிருக்கும்படி

எங்ஙனேயென்று கேட்டுவரச்சொல்லி வரவிட்டருளினர்' என்று விண்ணப்பஞ்செய்ய, அநந்தாழ்வானும் ஆகில், '*(கொக்குப் போலேயிருக்கும், கோழி போலேயிருக்கும், உப்புப்போலேயிருக்கும்.) உம்மைப்போலேயிருக்கும்' என்று அருளினர்; இத்தால், தன் ஜ்ஞாநாநுஷ்டா₂நாபி₄மாநாதி₃ நிமித்தமாக ஸ்ரீவைஷ்ணவர்கள் திரளிலே முற்பாட்டுக்கு ஆசைப்படாதே, பிற்பாட்டுக்கே ஆசைப்பட்டுத் ததீ₃யஶேஷத்வத்தைப் பேணுகை ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணமென்று உத்தரமருளிச்செய்து விட்டாராய்த்து.

ஒருநாள் பட்டர் ஸ்ரீபாத₃த்திலே ஸேவித்திருப்பார் ஒரு ஸ்ரீவைஷ்ணவர் ஸஹவாஸ தோ₃ஷத்தாலே கலங்கி விஷயப்ராவண்யம் தலையெடுத்து, பட்டர் ஸந்நிதி₄யிற்சென்று 'பட்டரே! உமக்கும் நமக்கும் பணியில்லை' என்று சொல்ல, பட்டரும் 'வாராய் பிள்ளாய்! அது உன் நினைவாலேயன்றோ; நீ விட்டாலும் நாம் விடுவோமோ?' என்று அருளிச்செய்தருள, அவனும் அகன்று போகத்தேட, இவரும் அவனை ப₃லாத்கரித்துப்பிடித்து உபாயேந ஜ்ஞாநோபதே₃ஶ முக₂த்தாலே வருந்தித் திருத்தி ஸ்ரீபாத₃த்திற்கு அந்தரங்க₃ராக்கிக் கொண்டருள, அவரும் மஹாவிரக்தராய் நிலையிலே நின்றருளினர். ஆகையாலே, அஜ்ஞாநம் தலையெடுத்து அகன்று போவாரையுமுட்பட விடாதே யத்நேந திருத்திச் சேர்த்துக் கொள்ளுகையே ஸதா₃சார்ய லக்ஷணமென்கிறது.

ஒருநாள் பட்டரும் ஸ்ரீவைஷ்ணவர்களுமாகப் பெருங்கூட்டத் திருவோலக்கமாக எழுந்தருளியிருந்து ப₄க₃வத் கல்யாண கு₃ணாநுஸந்தா₄நம் நடவாநிற்க, ஒரு ஸ்ரீவைஷ்ணவர் 'நாம் பண்ணின ஸுக்ருதமன்றோ இப்படியிருக்கப்பெற்றது!' என்ன, அவ்வளவிலே சிறியாச்சான் எழுந்திருந்து நின்று 'நெடுங்காலம் பெருமாள் ரக்ஷகரென்று ஶிக்ஷித்துவைத்து, இப்போதாக ஒரு ஸுக்ருததே₃வருண்டாவதே!' என்று அருளினர்; இத்தால் உஜ்ஜிஜீவயிஷுவான ஈஶ்வரனிருக்க ஆநுகூல்யங்களுக்கு ஸுக்ருதம் அடியென்கை ஸ்வரூபநாஶமென்றபடி,

பட்டரோடே அமுதனர் வெறுத்தருளி 'தாம் ஆழ்வானுடைய வெற்றிலைச் செருக்கிலே பிறந்தவர். நான் ஆழ்வானுடைய ஜ்ஞாநச்செருக்கிலே பிறந்தவனன்றோ?' என்று சொல்லிவிட, அத்தை பட்டர் கேட்டருளி 'பாசுரம் அழகிது; ஆகிலும், இத்தைத் தாமே சொன்னரே!' என்று அருளிச்செய்தார்; ஆகையாலே ஆசார்யாபி₄மாநஜநிதஸ்வோத்கர்ஷரூப ஶ்லாக₄வசநம் ஸ்வரூபாநுசிதமென்றபடி,

---

* ( ) இவ்வடைப்பினுள் உள்ளது சில பிரதிகளிலேயே காண்கிறது. அதற்கு விவரணமும் இல்லை.

ஒருநாள் பெருமாள் புறப்பட்டருளி ஒரு திருமண்டபத்திலே எழுந்தருளியிருக்கச்செய்தே பட்டர் திருவால வட்டம் ஸேவித்திரா நிற்க. ஸ்ரீபாத$_3$த்துமுதலிகள் 'ஸந்த்$_4$யாவந்த$_3$நத்திற்குக் காலம் தப்புகிறது' என்று விண்ணப்பஞ்செய்ய பட்டரும் 'ப$_4$க$_3$வத் கைங்கர்ய நிரதருக்கு ஸந்த்$_4$யாவந்த$_3$நவைகல்யதோ$_3$ஷம் வாராது' என்று அருளிச்செய்தருளினர்; இதற்குக் கருத்து :— ''மத்கர்ம குர்வதாம் பும்ஸாம் கர்மலோபோ ப$_4$வேத்$_3$யதி$_3$ | தத் கர்ம தே ப்ரகுர்வந்தி திஸ்ர: கோட்யோ மஹர்ஷய: ||'' [என்னுடைய கைங்கர்யத்தைச் செய்யும் மனிதர்களுக்கு அதனால் நித்ய நைமித்திக கர்மங்கள் நழுவினவாகில், மூன்றுகோடி மஹர்ஷிகள் அக்கர்மங்களைச்செய்து ஈடுகட்டுகின்றனர்.] என்று திருமுகப் பாசுரமிருக்கையாலே, ப$_4$க$_3$வத் கைங்கர்யத்தையிழந்து நித்ய கர்மாநுஷ்டா$_2$நார்த்த$_2$மாகப் போகை ஸ்வரூப விருத்$_3$த$_4$மென்றபடி.

ஒருகால் ப$_4$ட்டருடனே அநேக வித்$_3$வான்கள் திரண்டு வந்து தர்க்கிக்க. பட்டர் அவர்களெல்லாரையும் வாய் மூடுவித்து ஜயித்தருள. பின்னையும் அவர்கள் 'இவருடைய ஸர்வஜ்ஞதையைப் பரீக்ஷிப்போம்' என்று ஒரு குடத்திலே ஒரு பாம்பை அடக்கிக் கட்டி 'இக்குடத்திலேயிருக்கும் வஸ்து என்?' என்று கேட்க, பட்டரும் 'திருவெண் கொற்றக் குடை இருக்கிறது' என்ன, அவர்களும் சிரித்துக் குடத்துக்கட்டை அவிழ்த்துவிட்டவளவிலே போ$_4$கி$_3$ புறப்பட, அவர்களும் 'இது கொற்றக்குடையோ' என்ன, பட்டரும் 'அன்றோ? ''சென்றால் குடையாம்'' என்றன்றோ ஆழ்வார் அருளிச்செய்தது' என்ன, அவர்களும் இவருடைய ஸர்வஜ்ஞதைக்கு விஸ்மயப்பட்டு க்ருதார்த்த$_2$ராய்ப் போனார்கள்.

முன்பு உடையவர் காலத்திலே ஆசார்யர்களெல்லாரும் உடையவருக்கு மாநஸபுத்ரரான திருக்குருகைப்பிரான் பிள்ளானை அநுவர்த்தித்து 'ஆழ்வார்களருளிச் செயல்களின் அரும்பொருள் தெரியும்படிக்கு தேவரீர் வ்யாக்$_2$யாநஞ் செய்தருளும்படி உடையவரை வேண்டிக்கொள்ளவேணும்' என்று பிள்ளானுக்கு விண்ணப்பஞ்செய்ய, பிள்ளானும் உடையவர் பெருங்கூட்டத்திருவோலக்கமாக எழுந்தருளியிருக்கச்செய்தே ஸாஷ்டாங்க$_3$ப்ரணாமம் பண்ணி ஸவிநயராய் இரப்புடனே 'ஒரு விண்ணப்பமுண்டு' என்று சொல்ல, உடையவரும் 'என்?' என்று கேட்டருள, பிள்ளானும் 'தேவரீர் ஸ்ரீப$_4$ாஷ்யமருளிச்செய்து தி$_3$க்$_3$விஜயம் பண்ணி த$_3$ர்ஶநத்தை நிலைநிறுத்தியருளிற்று; இனி திருவாய்மொழி முதலான ஆழ்வார்கள் தி$_3$வ்யப்ரப$_3$ந்த$_4$ங்களுக்கும் வ்யாக்$_2$யாநம்செய்து ரக்ஷித்தருளவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, உடையவரும்

திருவுள்ளத்திலே விசாரித்தருளி 'அப்படியாம்; நாம் அருளிச் செயல்களுக்கு வ்யாக்₂யாநம் பண்ணினுல், மந்த₃மதிகளுக்கு இதற்கு இவ்வளவிலே அர்த்த₂முள்ளதென்று தோற்றும், ஆகில், அபசாரமாம்; ஆழ்வார்கள் பாசுரங்களுக்கு அவ்வவருடைய பு₃த்₃தி₄க்கு ஈடாக ப₃ஹு₂வாகச் சுரக்கும்; ஆகையாலே, நாம் அருளிச்செயல்களுக்கு வரம்பு கட்டினுப்போலேயாம்; நீர் ஒருபடி திருவாய்மொழிக்கு வ்யாக்₂யாநஞ் செய்யும்' என்று நியமித்தருளினுர். திருக்குருகைப்பிரான் பிள்ளானும் யதிராஜரநுமதிகொண்டு ஸ்ரீவிஷ்ணுபுராண ப்ரக்ரியையாலே திருவாய்மொழிக்கு முந்துற இனிதாக ஆருயிரப்படி உரைத்தருளினுர். பட்டரும் நஞ்சீயருக்குப் பிள்ளான்படி ஆருயிரமும் நன்ருக ப்ரஸாதி₃த்தருளினுர்.

நஞ்சீயரும் அத்தை நன்ருக அதி₄கரித்து, பட்டரை அநேகமாக அநுவர்த்தித்து அவருடைய அநுமதிகொண்டு திருவாய்மொழிக்கு ஒன்பதினுயிரப்படியாக ஒரு வ்யாக்₂யாநம் பண்ணுநிற்கச்செய்தே, பட்டருக்கு இருபத்தெட்டாந் திருநக்ஷத்ரத்திலே ஒரு கைஶிகத்வாதஶியினன்று பெருமாள் ஸந்நிதி₄யிலே நின்று கைஶிகபுராணம் வாசித்தருளாநிற்க. என்றையும் போலன்றிமய ஒரு பத₃த்திலே நின்று ப₃ஹு₂முக₂மாக ப₄ாவார்த்த₂ங்களை அருளிச்செய்கிற படிகளைக் கண்டு, பெருமாள் திருவுள்ளம்பற்றி உகந்து இவருக்குத் தாம் சாத்தியிருந்த திருமாலை திருப்பரியட்டம் திருவாப₄ரணம் முதலானவற்றையும் தாம் எழுந்தருளியிருக்கும் தி₃வ்யஸிம்ஹாஸநத்தையும் பின்னையும் சிலவற்றையும் பரிசிலாக இரங்கியருளி. மார்புந் தோளும் பூரித்துத் திருமேனி தெரியாமல் த்வரை விஞ்சி மாறி 'இவர்க்கு மற்று எது கொடுப்போம்?' என்று ஸந்தோஷாதிஶயத்தாலே 'பட்டரே!, உமக்கு மேலைவீடு தந்தோம்' என்று திருவுள்ளமாக, இவரும் 'மஹாப்ரஸாத₃ம்' என்று அங்கீ₃கரித்தருள, திருவோலக்கமடையக் கடல் குழம்பினுப்போலே, 'இப்படி திருவுள்ளமாவானென்?' என்று கலங்கி வயிறு பிடிக்க, பட்டரும் ஹர்ஷப்ரகர்ஷத்துடனே பெருமாள் திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து க்ருதாஞ்ஜலிபுடராய் நின்றுகொண்டு 'நாயன்தே! தேவரீர் அர்ஜுநனைக் குறித்து "மோக்ஷயிஷ்யாமி" [19-ம் பக்கத்திலுள்ள கீதா சரமஶ்லோகம்] என்று அருளிச் செய்தருளிற்றென்று கேட்பார் வார்த்தை கேட்டிருக்கையன்றிக்கே, தேவரீர் தாமே இப்படி திருவாய் மலர்ந்தருளப்பெற்ற இப்பேற்றுக்கு அடி-உடையவர் தேவரீர் திருவடிகளிலே காட்டிக்கொடுத்த உறவும், ஆழ்வாரோடு உண்டான குடல்

துடக்கும். எம்பாரருளுமிறே' என்று விண்ணப்பஞ்செய்ய, திரு வோலக்கத்திலிருந்த ஸ்ரீரங்கமறையோர் பட்டரைப் பார்த்து, "பெருமாள் உகப்புத் தலைமண்டையிட்டு விசாரியாமல் ஒரு வார்த்தை அருளிச்செய்தருளினார்! நீர் இங்ஙனே உகந்து அங்கீ₃ கரிக்கிறதென்? உம்மைக் கொண்டு இவ்விபூ₄தியைத் திருத்த வேணுமென்றன்றோ பெருமாள் திருவுள்ளம் பற்றியிருக்கிறது' என்ன, பட்டரும் 'ஆனால் இவ்விபூ₄தியும் இவ்விபூ₄தியிலுள்ளா ரும் பா₄க்₃யஹீநரானால், அடியேன் செய்வதென்? நாய்க்குடலுக்கு நறுநெய் தொங்குமோ? என்னை இவ்விபூ₄தி பொறுக்குமோ? இன்னம் சிறிதுநாள் இங்கே அடிமை கொண்டருளில் பரமபத₃த் துக்கும் இதுக்கும் சுருளும்படியுங் கட்டேனோ?' என்று பெருமாள் தம்மை விசேஷகடாக்ஷஞ் செய்தருளின ராஜகுல மாஹாத்ம்யத் தாலுண்டான செருக்குத் தலை மண்டையிட்டு ஹ்ருஷ்டோக்தி யைப் பண்ணி, 'நாயன்தே! ஆஸநபத்₃மத்திலே அழுத்தியிட்ட திருவடித் தாமரைகளும் அஞ்சலென்ற கையும் கவித்த முடியும் முறுவல் பூரித்த சிவந்த திருமுக மண்டலமும் திருநுதலில் கஸ் தூரித் திருநாமமும் பரமபத₃த்தில் கண்டிலேனாகில், ஒரு மூலை யடியே முறித்துக்கொண்டு குதித்து மீண்டுவருவேன்' என்று விண்ணப்பஞ்செய்து, நம்பெருமாளையும் பெரிய பெருமாளையும ஆபாதசூடம் அநுப₄வித்து, கோயிலாழ்வாரையும் ஆழ்வாரையும் கண்ணார ஸேவித்து நிற்க. பெருமாள் தம் வரிசைகளெல்லாவற்று டன் ப்₃ரஹ்மரத₂ம் பண்ணுவித்து, கோயில் அனைத்துக்கொத்தும் அகி₂ல ஸ்ரீவைஷ்ணவர்களும் எல்லா ஆசார்யர்களும் மற்றுமுள்ள விப்ரவர்க்கும் சூழ்ந்து ஸேவித்துவர, அவர் திருமாளிகையிலே எழுந்தருளி ஆண்டாளை ஸேவித்து நிற்க, அவரும் 'நலமந்த மில்லதோர் நாடு புகுவீர்' என்று ஆசீர்வதி₃க்க, பட்டரும் 'அம்மா! அடியேன் வேண்டுவதீதே' என்று உகந்தருளி;

திருப்பதியிலுள்ளவர்களடங்கத் திருமாளிகையிலே அமுது செய்தருளின பின்பு பெருங்கூட்டமாக எழுந்தருளியிருந்து, என்றையும்போலே திருநெடுந்தாண்டகத்திற்கு அர்த்த₂ம் அரு ளிச்செய்யாநிற்கச்செய்தே "அலம்புரிந்த நெடுந்தடக்கை" என் கிற பாட்டுக்கு அர்த்த₂மருளிச்செய்கிறபோது, "அஞ்சிறைப்புள் தனிப்பாகன்" என்கிறவிடத்திலே "பறவையேறு பரம்புருடா நீ யென்னைக் கைக்கொண்டபின், பிறவி யென்னுங் கடலும் வற்றிப் பெரும் பதமாகின்றதால்" என்று இத்தை இரட்டித்து அநுஸந் தி₄த்தருளித் திருக்கண்களை மலரவிழித்துத் திருமேனியைச் சிலிர்ப்

பித்துப் புன்முறுவல் செய்து திருமுடியிலே அஞ்சலி செய்து கொண்டு அணையிலே சாய்ந்துநிற்கச்செய்தே, ப்ரஹ்மகபாலம் வெடித்துத் திருநாட்டுக்கெழுந்தருள, முதலிகளும் உள்ளே சென்று 'பட்டர் இளைத்து எழுந்தருளியிருக்கிறார்' என்று ஆண்டானுக்கு அறிவிக்க, ஆண்டானும் சடக்கென எழுந்தருளி, பட்டரை வாரி யெடுத்து மார்பிலே அணைத்துக்கொண்டு, திருநாட்டுக்கு எழுந் தருளின விஸ்மயத்தைக் கண்டு, திருவுள்ளங் கலங்குதல் திரு முகங்கன்றுதல் கண்ணீர் மல்குதல் செய்யாதே, 'வண்டுகள் பூவின் பரிமளமறிந்து ஆக்₂ராணித்து க்₃ரஹிக்குமாபோலே, பட்டருடைய ஸௌகுமார்யமறிந்து நலக்காமல் இவர் ஹ்ருத்கமலத்தை அலர்த் தித் தானன் தெய்வ வண்டானை தன்மை தோன்ற ஸ்ரீவைகுண்ட₂ நாத₂ன் இவரைக் கைக்கொண்டருளவதே! பெருமாளுக்கும் நாச்சிமாருக்கும் பேரிழவும் பெருங்லேசமும் பெருவயிற்றெரிச் சலுமாய்ச் செல்லா நிற்க, பரமபத நிலயனுக்கும் அங்குள்ள நாச்சிமாருக்கும் பெருவாழ்வும் பெருஞ்செல்வமும், பெருங்களிப்பு மாய்ச் செல்லுகிறதே!' என்று புத்ரசோக லேசஸ்பர்சமுமற்று, 'உடையவன் உடைமையைக் கைக்கொண்டால், நாம் வெறுக்க லாமோ?' என்று ஆண்டான் இருக்க, கடல் கலங்கினாற்போலே கோயிலுள்ளாரடங்க சோகார்த்தராய்க் கிடந்து துடிக்க, வேத₃ாந் திகளும் வேரற்ற மரம்போலே கே₄ஶஷித்துக்கொண்டு விழுந்து சோகார்த்தராய், ப₃ஹு'வாய் ப்ரலாபித்து மழைக் கண்ணீர் மல்கி நிற்க, பெருமாளும் நாச்சிமாரும் திரு முத்தின் பணி காளாஞ்சி திருவெண்சாமரம் திருவாலவட்டம் திருவெண்கொற்றக்குடை வெண்முத்தின் கலசம் மேற்கட்டு முத்துத்தாமம் தொடக்கமான தம்முடைய ஸர்வபரிஜநபரிச்ச₂த₃ங்களடங்கக் கொடுத்துவிட்டு, 'நம்முடைய அவப்₄ருதே₂ாத்ஸவம் கொண்டாடுமாபோலே பட்ட ருக்கும் அவப்₄ருதே₂ாத்ஸவங் கொண்டாடுங்கோள்' என்று திரு வுள்ளமாய், திருமுகங்கன்றித் திருமுத்துதிர்த்துப் பெருமாளும் நாச்சிமாரும்கூடத் திருமஞ்சநமாடியருளி, 'இப்போது நமக்குச் செவ்வாய் வக்ரமாய்த்து' என்று திருவுள்ளம் நொந்து, 'நாம் புத்ரனை யிழந்தோமே!' என்று கருளமுதும் அமுது செய்யாமல் முசித்து எழுந்தருளியிருக்க;

வேத₃ாந்தி முதலான முதலிகள் சீராமப்பிள்ளையைக்கொண்டு பட்டரை ப்₃ரஹ்மமேத₄த்தாலே ஸம்ஸ்கரிப்பித்துப் பள்ளிபடுத்து, அவப்₄ருத₂ங் கொண்டாடி மீண்டுவரும்போது, நஞ்சீயர் முட்டாக் கிட்டு மூடிக்கொண்டு புழக்கடை வழியாலே தம்மட₂மேயெழுந்

தருள, ஸ்ரீபாத3த்து முதலிகள் 'இதுக்கு அடியென்?' என்று விண்ணப்பஞ்செய்ய, நஞ்சீயரும் 'புதுக்க அறுத்த வித4வை தெருவிலே வெளிப்பட வருமோ?' என்று அருளிச்செய்தருளினர்; அதாவது—ஸச்சி2ஷ்யன் ஸத3ாசார்யன் திறத்து ப4ார்யாஸமனு யிருக்கை ஸ்வரூபஸித்3தி4யென்று கருத்து.

பின்பு ஆண்டாளும் முதலிகளும் திருமாளிகையிலே புக்க வளவிலே வெறிச்சான திருமாளிகையைக் கண்டு, பட்டர் திருத் தம்பியாரான சீராமப்பிள்ளை 'நல்லதோர் தாமரைப்பொய்கை நாண்மலர் மேற்பனிசோர, அல்லியும் தாது முதிர்ந்திட்டழ கழிந்தாலொத்ததாலோ, இல்லம் வெறியோடிற்றாலோ!' என்று பாடிக்கொண்டு விழுந்து பெருமிடறுசெய்து ஆர்த்தராய்க் கூப் பிட்டு ஶோகிக்க, ஆண்டாளும் அவ்வார்த்தியைக் கண்டு 'இவர் ஆழ்வான் திருவயிற்றிலே பிறக்கத்தக்கவரல்லர்' என்று முசித்து முதலிகளைப் பார்த்து அருளிச்செய்து. 'பிள்ளாய்! பட்டர் பெற்ற பேற்றுக்குப் பொறுமல் ஜ்ஞாதித்வங்கொண்டாடுகிறீரோ? நீர் இப்படி செய்கையில் நான் ஒரு கைப்புடையிருக்கிறேன்' என்ன, சீராமப்பிள்ளையும் ஶோகத்தைவிட்டுத் துணுக்கென எழுந்திருந்து ஆண்டாள் திருவடிகளிலே த3ண்டன் ஸமர்ப்பித்து, 'அபசாரப் பட்டேன்; பொறுத்தருளவேணும்' என்று க்ஷமைகொண்டு, ப4ட்டருக்குத் தீர்த்த2 திருவத்4யயநஞ் செய்தருளி நிறைவேற்றின பின்பு, பெருமாளைத் திருவடிதொழச் சென்றவளவிலே.

பெருமாள் சீராமப்பிள்ளையை அருளப்பாடிட்டருளி, 'பட்டரை யிழந்தோம் நாம்; உமக்கு நாம் இருக்கிறோம்; முசியாதே கொள்ளும்' என்று பட்டருடைய வரிசைகளடங்கக் கொடுத்தருளி ப்ரஹ்மரதம் பண்ணுவித்துத் திருமாளிகையிலே போகவிட, சீராமப்பிள்ளையும் முசிப்பற்று ஹ்ருஷ்டராயிருந்து த3ர்ஶநம் நிர் வஹித்துக்கொண்டு எழுந்தருளியிருந்தார்.

இத்தால், மஞ்சள்நீர் குடிப்பித்துப் பெற்றுவளர்த்தவரே தம் பெருவீடு கொடுக்கும்படியான தன்னேற்றமும், அர்த்த2ாநு ஸந்த4ாந வேளையிலே ஹார்த்த3ன் ஸாக்ஷாத்கரித்து வழி நடத்தும்படியான தன்னேற்றமும், பேறு இழவு இரண்டுக்கும் பெருமாள் தாமாய் அதில் கலக்கமற்ற தன்னேற்றமும், ஆழ் வான் குடல் துடக்குடைய பட்டர்க்கேயுள்ளதொன்றிறே.

பட்டர் வைபவம் முற்றச்சொல்லி முடியாதிறே. யத2ாமதி யத2ாஶ்ருதமாகச் சொன்னதித்தனை.

பட்டர் திருநக்ஷத்ரம்—வைகாசியில் அநூராத4ம்.

அவர் தனியன் :— "ஸ்ரீபராஸரப4ட்டார்ய: ஸ்ரீரங்கே3ஸ புரோஹித: | ஸ்ரீவத்ஸாங்கஸுத: ஸ்ரீமாந் ஸ்ரேயஸே மேஸ்து பூ4யஸே ||" [ஸ்ரீரங்கநாதனுக்குப் புரோஹிதராய், ஸ்ரீவத்ஸாங்கரென்னும் கூரத்தாழ்வான் குமாரராய் திருவுடையவரான ஸ்ரீபராஸரபட்டார்யர் எனக்கு மிகுதியான நன்மையின் பொருட்டு ஆகட்டும்.]

**7. சரமோபாய நிர்ணயம் :** ஆழ்வானுக்கு பட்டரைக்கொண்டு திருவத்4யயன பர்யந்தம் நடத்தி, மற்றைநாள் உடையவர் பட்டரையும் கூட்டிக்கொண்டு பெரியபெருமாளை ஸேவிப்பதாக எழுந்தருள, அவ்வளவிலே பெருமாளும் பட்டரை அருளப்பாடிட்டருளி "'உமக்குப் பிதா போனாரென்று வ்யாகுலப்படாதே கிடீர்; நாமுமக்குப் பிதா" என்று பட்டரை புத்ரஸ்வீகாரம் பண்ணியருளி, 'நீர் ஒன்றுக்கும் கரையாதே கொள்ளும் காணும். த்3ருஷ்டத்தில் உமக்கு ஒரு குறைகளும் வையோம்; அத்3ருஷ்டத்துக்கு நம் இராமாநுசனிருக்கக் கரையவேண்டுவதில்லை. 'நம் பரமாயதுண்டே' என்று துணிந்திரும்" என்று அருளிச்செய்தார்.

**8. சரமோபாய நிர்ணயம் ;** இரண்டாம் பாகம் பக்கம் 80. ஐ. நி. 90 காண்க.

**9. சரமோபாய நிர்ணயம் :** பட்டரும் நஞ்சீயருக்குத் திருவாய்மொழி வ்யாக்2யானம் அருளிச்செய்து சாத்தினவுடனே, "ப்ரத்யக்ஷே கு3ரவ: ஸ்துத்யா:" [ஆசார்யர்கள் நேரில் துதிக்கத் தக்கவர்கள்] என்கிறபடியே, நஞ்சீயர் பட்டரை மிகவும் கொண்டாடி, அடியேனுடைய தலையிலே தேவரீர் திருவடிகளை ப்ரஸாதி3த்தருளவேணுமென்ன, ஏகாந்தத்திலே அழைத்தருளி, திருவடிகளிரண்டையும் ப்ரஸாதி3த்தருளி "இதுவன்று உமக்குத் தஞ்சம். உம்முடைய ப்ரதிபத்திக்காகச் செய்தோமித்தனை. உமக்கு மெய்யே பேறு கைப்படவேண்டில், உமக்கும் நமக்கும் மற்றுமுள்ள எல்லார்க்கும் உத்தாரகரான எம்பெருமானார் திருவடிகளே பேற்றுக்கு உடலென்று விஸ்வஸித்துத் ததே3கநிஷ்ட2ராய் இரும். இல்லையாகில் நித்யஸம்ஸாரியாய் விடுவீர்" என்றருளிச்செய்தார். இத்தால் "எம்பெருமானாருடைய ஸம்ப3ந்த4மே உஜ்ஜீவனத்துக்கு உடல். தத்3வ்யதிரிக்த விஷயங்களை உஜ்ஜீவனத்துக்கு உடலாக நினைக்கை அஜ்ஞான கார்யம்" என்றபடி.

10. பெரிய திருமுடியடைவு : பெரிய பட்டருக்கும் ஸ்ரீராமப் பிள்ளைக்கும் திருவவதார ஸ்தலம் நம்பெருமாள் கோயில். பெருமாளுக்கு பட்டரும், ஸ்ரீராமப்பிள்ளையும் இரண்டு பிள்ளைகள். இவர்களுக்குத் திருநக்ஷத்ரங்கள் சுபக்ருத் வருஷம் வைகாசி மாஸம் புதன்கிழமை அநுஷம், இவர்கள் பராஶராம்ஶமும், வ்யாஸாம்ஶமும் ஆனவர்கள். திருவவதாரம் நம்பெருமாள் வரப்ரஸாதத்தினாலே. திருத்தகப்பனார் கூரத்தாழ்வான். திருத்தாயார் ஆண்டாளம்மாள். குலம் வடமாள். குடி கூரம். ஹாரீத கோத்ரம். யஜுஶ்ஶாகை. ஆபஸ்தம்பஸூத்ரம். இருப்பிடம் கோயில். இவரை எடுத்துக்கொண்டு வாருமென்று எம்பெருமானார் எம்பாரை யனுப்ப, அவர் இவருக்கு த்வயோபதேஶம் பண்ணிக்கொண்டு போய் ஸந்நிதியிலே வைக்க, எம்பெருமானாரிவரைக் கடாக்ஷித்துத் திருவுள்ளமுகந்தருளி இவருக்கு ஸ்ரீபராசரபட்டரென்றும், ஸ்ரீவேதவ்யாஸ பட்டரென்றும் திருநாமம் சாத்தி, எம்பாரைப் பார்த்து நீர் இவருக்கு ஆசார்யராய் ஸகலார்த்தங்களும் ஸாதியுமென்று நியமித்தார். ஆகையாலே எம்பாரிவருக்குப் பஞ்சஸம்ஸ்காரங்களும், திருவாய்மொழி முதலான க்ரந்தங்களும், வ்யாக்யானங்களும் ஸாதித்தருளினார். ஆகையாலே இவருக்கு ஆசார்யர் எம்பார். ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களும் ஜாதகர்ம நாமகரண சௌளோபநயநாதி ஸத்கர்மங்களும் ஸாதித்தருளினவர் கூரத்தாழ்வான். திருவாராதனம் அழகிய சிங்கர். ஸ்ரீராமப்பிள்ளை குமாரர் வாக்கினால் வென்றார் பட்டர். அவர் செய்தருளின க்ரந்தங்கள் க்ஷமாஷோடஶம். அவர் குமாரர் வேதவ்யாஸபட்டர். அவர் செய்தருளின ப்ரபந்தம் ஸ்ரீபாஷ்யத்துக்கு ஶ்ருதப்ரகாஶிகை முப்பத்தாறாயிரம். ஆகையால் அவருக்கு ஶ்ருதப்ரகாஶிகா பட்டரென்று திருநாமம், அவர் குமாரர் வேதாந்தாசார்ய பட்டர். அவர் செய்தருளின க்ரந்தங்கள் ஸ்ரீமதஷ்டாக்ஷரதீபிகை, ரஹஸ்யத்ரயம், தனித்வயம். அவர் குமாரர் ஸ்ரீரங்கராஜபட்டர். இவர் நூற்றைந்து திருநக்ஷத்ரம் எழுந்தருளியிருந்தார். இவருக்குத் தீர்த்ததிவஸம் ஜய (பவ?) வருஷம் கார்த்திகை மாஸம் சுக்ல பக்ஷத்தில் த்வாதசி.

ஸ்ரீராமப்பிள்ளைக்குத் தனியன்

பௌத்ரம் ஸ்ரீராமமிஶ்ரஸ்ய ஸ்ரீவத்ஸாங்கஸ்ய நந்தநம் |
ராமஸூரிம் பஜே பட்டபராஶரவராநுஜம் ||

[ஸ்ரீராமமிஶ்ரர் என்னும் கூரத்தாழ்வாருக்குப் பேரனாய், ஸ்ரீவத்ஸாங்கர் என்னும் கூரத்தாழ்வானுக்குப் பிள்ளையாய், ஸ்ரீபராஶர பட்டருக்குத் தம்பியான ஸ்ரீராமப்பிள்ளையை ஆஶ்ரயிக்கிறேன்.]

### வாக்கினால் வென்றார் பட்டருக்குத் தனியன்

ஸ்ரீப$_4$ட்டார்யக்ருபாலப்$_3$த$_4$தத்வ ஜ்ஞாந நிதி$_4$ம் ப்ரபு$_4$ம் ।
ஸ்ரீராமஸூரிதநயம் ஸேவே வாக்$_3$விஜயம் கு$_3$ரும் ॥

[ஸ்ரீபராசரபட்டருடைய கருணையினால் பெற்ற உண்மையறிவையுடையவராய், ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகராய், ஸ்ரீராமப்பிள்ளையின் குமாரரான வாக்கினால் வென்றார் பட்டருக்கு அடிமை செய்கிறேன்.]

### ஶ்ருதப்ரகாஶிகாபட்டருக்குத் தனியன்

யதீந்த்$_3$ரக்ருத ப$_4$ாஷ்யார்த்த$_2$ா யத்$_3$வ்யாக்$_2$யாநேந தூ$_3$ர்ஶிதா: ।
வரம் ஸுத$_3$ர்ஶநார்யம் தம் வந்தே$_3$ கூரகுலாதி$_4$பம் ॥

[கூரகுலத்திற்குத் தலைவராய், மிகச்சிறந்தவராய், எம்பெருமானார் அருளிய ஸ்ரீபாஷ்யத்தின் பொருள்களை (ஶ்ருதப்ரகாசிகையால்) விரித்துக்காட்டியவரான ஸுதர்ஶநபட்டரை வணங்குகிறேன்.]

பெரியபட்டருக்குத் திருநக்ஷத்ரம் வைகாசி மாஸம் அநுஷம். தேவியார் மன்னியம்மன். திருநாமங்கள் ஸ்ரீபராசரபட்டர். வேதாந்தாசார்யபட்டர், திருவரங்கப் பெருமாள் பட்டர். இவர் செய்தருளின க்ரந்தங்கள் ஸ்ரீரங்கராஜஸ்தவம், ஸ்ரீகுணரத்ன கோஶம் ஸஹஸ்ரநாம பாஷ்யம், க்ரியாதீ$_3$பம், அஷ்டஶ்லோகி, சது:ஶ்லோகி, த்$_3$விஶ்லோகி, தனிஶ்லோகி. இவருக்குத் தீர்த்த திவஸம் ஜய வருஷம் கார்த்திகை மாஸத்தில் சுக்லபக்ஷத்திலே த்வாதசி.

### இவருக்குத் தனியன்

ஸ்ரீபராஶர ப$_4$ட்டார்ய: ஸ்ரீரங்கே$_3$ஶ புரோஹித: ।
ஸ்ரீவத்ஸாங்கஸுத: ஸ்ரீமாந் ஶ்ரேயஸே மேஸ்து பூ$_4$யஸே ॥

இவர் குமாரர் உத்தண்டபட்டர். அவர் குமாரர் பராஶர பட்டர். அவர் குமாரர் ஸ்ரீரங்கநாத பட்டர். அவர் குமாரர் பட்டபராஶரர். அவர் குமாரர் ஸ்ரீரங்கபட்டர். அவர் குமாரர் ஸுதர்ஶன பட்டர். அவர் குமாரர் ஸ்ரீரங்கராஜபட்டர். அவர் குமாரர் திருவேங்கட பட்டர், அவர் திருத்தாயார் அம்மாஞ்சியம்மையார். பெரிய

பட்டர் திருவடிகளிலே ஆஶ்ரயித்த முதலிகள் நஞ்சீயர், நலந் திகழ்நாராயண ஜீயர், கடகத்துப்பிள்ளை, அம்மணியாழ்வான், வீரசிகாமணி வல்லபராயன், பிள்ளைவிளப்பரையர், நம்பி கே3ாவர்த்த4ன தாஸர், செடியெடுத்த நல்லான் முதலானவர்கள். இவர்கள் எல்லாருக்கும் திருவாய்மொழி முதலான திவ்யப்ரபந்தங் களும், வ்யாக்யானங்களும், ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களும், பின்னும் வேண்டும் ரஹஸ்யங்களும் பட்டர் ஸந்நிதியிலே.

11 வார்த்தாமாலை 38.: நஞ்சீயரான வேதா3ந்திகளுக்குப் பெரியப4ட்டர் ஏகாந்தத்திலே பணித்த பரமரஹஸ்யம்;—திருமந்த் ரஜ்ஞானம் பிறந்தாலும் இங்கேயிருக்கிறவனாகையாலே ஸ்வரூபத் தோடே சேராத து3ரித பரம்பரைகள் வந்து மேலிட்டால், திரு மந்த்ரத்தில் பத3ங்களின் அர்த்த2ங்களை அநுஸந்தி4த்துப் பரி ஹரித்து மீளுவான்.

எங்ஙனேயென்னில்;— a ப3ஹுவிரோதி4 பீ3ஜமான ஸ்வா தந்த்ர்யம் மேலிட்டால், "ப4க3வத் பரதந்த்ரரல்லோமோ, நமக்கு ஸ்வாதந்த்ர்யம் கடவதோ?" என்று, அகாரார்த்த2த்தை அநு ஸந்தி4த்து மீளுவான்;

b அஸேவ்யஸேவைகள் வந்து மேலிட்டால், "நாம் அந் யர்க்கு ஶேஷமோ, ப4க3வத3நந்யார்ஹ ஶேஷபூ4தரல்லோமோ?" என்று உகாரார்த்த2த்தை அநுஸந்தி4த்து மீளுவான்;

c ஶரீரத்திலே கார்ஶ்யஸ்தூ2லாதி3கள் மேலிட்டால், "நாம் ஜ்ஞாநாநந்த3ஸ்வரூபரல்லோமோ, நித்யரல்லோமோ, ஏகரூப ரல்லோமோ, நாம் ஸ்வயம்ப்ரகாஶமன்றோ?" என்று, மகாரார்த் த2த்தை அநுஸந்தித்து மீளுவான்;

d "நமக்கு ஒரு புருஷார்த்த2ம் ஸம்பாதி3க்க வேண் டாவோ?" என்று ஸாத4நாநுஷ்டா2நம் பண்ணத்தேடினால், "ஸ்வ ரக்ஷணத்தில் ப்ராப்தியில்லாத ப4க3வத்பரதந்த்ரரல்லோமோ, ஸ்வதந்த்ரனன்றோ ரக்ஷணத்துக்குக் கடவன்" என்று, நமஸ்ஸில் அர்த்த2த்தை அநுஸந்தி4த்து மீளுவான்.

e தனக்கு உபகாரமாக எழுந்தருளியிருக்கிற அர்ச்சாவதா ரத்திலே சில குறை வந்து பிறந்து கண்ணுக்கு விஷயமானால், சேதநனுடைய இழவுக்கு ஈஶ்வரன் * ப்4ருஶம் ப4வதி து3க்கி2தனு

மாபோலே, ஈஶ்வரனுடைய இழவுக்கு து$_3$:க்கி$_2$தனாகாதபோது நாராயணபத$_3$த்தோடு உறவு போட்கனென்று அநுஸந்தி$_4$த்து "பர வ்யூஹ விப$_4$வாதி$_3$களெங்குமுள்ள குறைகள் தீர்ந்த இடமன்றோ; ஒன்றாலொரு குறைவற்ற இடமன்றோ; அநுப$_4$ாவ்யமெல்லாம் நாரஶப்$_3$த$_3$ாந்தர்க்க$_3$தமன்றோ" என்று நாராயண பத$_3$த்தை அநுஸந்தி$_4$த்து மீளுவான்;

f ஸ்வரூபத்தோடு சேராத இதர பரிமாற்றங்கள் மேலிட்டால், "ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தி கைங்கர்யமன்றோ" என்று சதுர்த்தி$_2$யில் அர்த்த$_2$த்தை அநுஸந்தி$_4$த்து மீளுவான்;

g இப்படி பரிஹரித்துக்கொள்ளாதபோது, 'பிறர்க்கு உபதேஶிக்கிறதுக்கும், இதில் தனக்குப் பிறந்த ஜ்ஞாநத்துக்கும் என்ன ப்ரயோஜநமுண்டு?' என்று அநுஸந்தி$_4$ப்பான்;

h ஸ்வபௌருஷத்தாலே தன் கார்யம் தான் நிர்வஹிப்பதாக நினைத்தானாகில், அகாரார்த்த$_2$த்தை அநுஸந்தி$_4$த்து மீளுவான்; அந்யரை ரக்ஷகராக நினைத்தானாகில், உகாரார்த்த$_2$த்தை அநுஸந்தி$_4$த்து மீளுவான்; ஸாத$_4$நத்திலே தனக்கு அந்வயம் உண்டு என்றும் ஸ்ரீவைஷ்ணவ ஸமபு$_3$த்$_3$தி$_4$யும் பண்ணினானாகில், நமஶ்ஶப்$_3$த$_3$ார்த்த$_2$த்தை அநுஸந்தி$_4$த்து மீளுவான்; ஈஶ்வர விபூ$_4$தி பூ$_4$தரோடே தனக்கு ராக$_3$த்$_3$வேஷம் நடையாடிற்றாகில், நாரஶப்$_3$த$_3$ார்த்த$_2$த்தை அநுஸந்தி$_4$த்து மீளுவான்; ஔபாதி$_4$கப$_3$ந்து$_4$க்கள் பக்கலிலே ப$_3$ந்து$_4$தாப்ரதிபத்தி பண்ணினானாகில், அயநஶப்$_3$த$_3$ார்த்த$_2$த்தை அநுஸந்தித்து மீளுவான்; புத்ர பஶ்வந்நாதி$_3$ தொடக்கமாக ஸ்வர்க்கை$_3$ஶ்வர்யம் நடுவாகக் கைவல்யம் முடிவாக உண்டானவற்றில் புருஷார்த்த$_2$பு$_3$த்$_3$தி$_4$ பிறந்ததாகில், சதுர்த்தி$_2$யில் அர்த்த$_2$த்தை அநுஸந்தி$_4$த்து மீளுவான்.

[விவரணம் : நஞ்சீயருக்கு ப$_4$ட்டர் அருளிச்செய்த இந்தப் பரமரஹஸ்யம் ப$_4$ட்டராலேயே அருளிச்செய்யப்பட்ட அஷ்டஶ்லோகியில் நாலாவதான "தே$_3$ஹாஸக்தாத்மபு$_3$த்$_3$தி$_4$ர் யதி$_3$ ப$_4$வதி பத$_3$ம் ஸாது$_4$ வித்$_3$யாத்த்ருதீயம், ஸ்வாதந்த்ர்யாந்தே$_4$ா யதி$_3$ ஸ்யாத் ப்ரத$_2$மம் இதர ஶேஷத்வதீ$_4$ஶ்சேத் த்$_3$விதீயம் | ஆத்மத்ராணோந்முக$_2$ஶ்சேத் நம இதி ச பத$_3$ம் ப$_3$ாந்த$_4$வாப$_4$ாஸலோல:, ஶப்$_3$த$_3$ம் நாராயணாக்$_2$யம் விஷயசபலதீ$_4$ஶ்சேத் சதுர்த்தீ$_2$ம் ப்ரபந்ந: ||" என்னும் ஶ்லோகத்திலே ஸங்க்$_3$ரஹிக்கப்பட்டது. இந்த ஶ்லோகத்தின் விவரணமாயிருப்பது இந்த வார்த்தை.

a பலவிதமான ஸ்வரூபோபாய புருஷார்த்த₂ விரோதி₄களுக்கு மூலகாரணமான ஸ்வாதந்த்ர்யம் மேலிட்டால் "நாம் எம்பெருமானுக்குப் பரதந்த்ரரல்லோமோ? நமக்கு ஸ்வாதந்த்ர்யம் தகுமோ?" என்று ஸர்வஜக₃த்காரணனாகவும், ஸர்வரக்ஷகனாகவும், (இதனாலேயே) ஸ்வதந்த்ரனாகவும் எம்பெருமானைச் சொல்லும் அகாரத்தின் பொருளை அநுஸந்தி₄த்து ஸ்வாதந்த்ர்யம் நீங்கப்பெறவேணும். "ஸ்வாதந்த்ர்யாந்தே₄ர யதி₃ ஸ்யாத் ப்ரத₂மம்" என்றதின் விவரணம் இது.

b தொண்டு செய்யத் தகாதவர்களுக்குத் தொண்டு செய்யும்படி நேர்ந்துவிட்டால் "நாம் வேறொருவருக்கு அடிமைப்பட்டவரோ? பிறர்க்குரியரல்லாதபடி எம்பெருமானுக்கே அடிமைப்பட்டவரல்லோமோ?" என்று அநந்யார்ஹ ஶேஷத்வத்தைக் காட்டும் உகாரத்தின் பொருளை அநுஸந்தி₄த்து அத்தொண்டிலிருந்து மீளவேண்டும். "இதர ஶேஷத்வதீ₄ஶ்சேத் த்₃விதீயம்" என்றதின் விவரணம் இது.

c நமது ஶரீரமானது மெலிந்திருப்பதையோ, பருத்திருப்பதையோ, அழகுடன் இருப்பதையோ, அழகில்லாமலிருப்பதையோ கண்டு தே₃ஹாத்மாபி₄மானத்தாலே இன்பதுன்பங்களோ, க₃ர்வ நிர்வேத₃ங்களோ ஏற்பட்டால் "நாம் ஜ்ஞாநாநந்த₃ங்களையே ஸ்வரூபமாக உடையோமல்லோமோ? நித்யரல்லோமோ? ஒருபடிப்பட்டிருப்பவரல்லோமோ? தானே ப்ரகாஶிக்கும் பொருளல்லோமோ? இப்பெருமைக்கெல்லாம் எதிர்த்தட்டாயிருப்பதன்றோ இந்த ஶரீரம்?" என்று ஜீவஸ்வரூபத்தைத் தெளிவாகச் சொல்லும் மகாரத்தின் பொருளை அறிந்து, மூற்கூறிய இன்பதுன்பங்களிலிருந்தும் க₃ர்வ நிர்வேத₃ங்களிலிருந்தும் மீளவேண்டும். (நிர்வேத₃ம்—மனவருத்தம்) "தே₃ஹாஸக்தாத்மபு₃த்₃தி₄ர் யதி₃ ப₄வதி பத₃ம் ஸாது₄ வித்₃யாத் த்ருதீயம்" என்றதின் விவரணம் இது.

d 'நமக்கு ஒரு நன்மையை நாம் தேடிக்கொள்ளவேண்டாமோ?' என்னும் நினைவாலே ஒரு ஸாத₄நாநுஷ்டா₂னம் பண்ணவேண்டும் என்று எண்ணமுண்டானால், "நம்மை நாம் ரக்ஷித்துக்கொள்வது தகாது என்று சொல்லலாம்படி நாம் எம்பெருமானிட்ட வழக்காயிருப்பவரல்லோமோ? ஸ்வதந்த்ரனாய், உடையவனான அவனன்றோ பரதந்த்ரராய், உடைமையான நம்

முடைய ரக்ஷணத்தைச் செய்யவேண்டியவன்" என்று நம:பத3த்தில் சொல்லப்பட்ட ஸ்வரக்ஷணத்தில் அஶக்தியை அநுஸந்தி4த்து முற்கூறிய ஸாத4நாநுஷ்டா2னத்திலிருந்து மீளவேணும் "ஆத்மத்ராணோந்முக2ஸ்சேத் நம இதி ச பத3ம்" என்பதின் விவரணம் இது.

e தனக்கு உதவி செய்வதற்காக எம்பெருமான் தானுகந்த திருமேனி ஒன்றிலே எழுந்தருளியிருக்கிற அர்ச்சாவதாரத்திலே (அரசியல் முதலான காரணங்களாலே) சில குறைகள் ஏற்பட்டு, ப்ரபன்னன் கண்ணுக்குத் தோன்றினால், "வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்4ருஶம் ப4வதி து3க்கி2த:" [ரா. அ. 2-40] [மனிதர்களுக்குத் துன்பம் ஏற்பட்டால் ராமபிரான் அவர்களைக் காட்டிலும் அதி4கமாகத் துன்புறுகிறான்.] என்கிறபடியே, எம்பெருமான் சேதனர்களின் துன்பங்கண்டு மிகவும் துன்புறுவதுபோலே, அர்ச்சாவதாரத்தில் எம்பெருமானுக்கு ஏற்படும் அந்தக் குறை கண்டு இச்சேதனன் துன்புறவில்லையாகில் நாராயணபத3த்தின் பொருள் தனக்குச் சரியாக விளங்கவில்லை என்று நினைத்து, "பரம், வ்யூஹம், விப4வம், அந்தர்யாமி ஆகிய இடங்களில் உள்ள ஸௌலப்4ய ஸௌஶீல்யாதி3கள் இன்மையாகிற குறைகள் தீர்ந்த விடமன்றோ இந்த அர்ச்சாவதாரம். 'ஸர்வம்பூர்ணம்' [த்3வயோபநிஷத்] என்கிறபடியே, ஒரு கு3ணங்கூடக் குறையாமல் எல்லா கு3ணங்களும் நிறைந்திருக்குமிடமன்றோ; இப்படி அநுப4விக்கப்படும் எல்லா கு3ணங்களும் நாரஶப்3த3த்தால் சொல்லப்படுகின்றனவன்றோ" என்று நாராயணபத3த்தின் பொருளை அநுஸந்தி4த்து, அக்குறையைக் குறையாக நினைப்பதினின்றும் மீளவேண்டும். அர்ச்சாவதாரத்திற்கே உரியதாய், எல்லா அபசாரங்களையும் பொறுத்துக்கொள்ளுகையாகிற ஸர்வஸஹிஷ்ணுத்வமென்னும் நிறைகு3ணமாகவே கொள்ளவேண்டுமென்று கருத்து. அஷ்டஶ்லோகியில் நாராயண பதா3ர்த்த2த்தின் அநுஸந்தா4னம் வேறு விதமாக நிரூபிக்கப்பட்டது. இவ்வார்த்தையின் கடைசியில் அதைக் காணலாம்.

f ஸ்வரூபத்துக்குப் பொருந்தாத விஷயாநுப4வங்கள் தன்னை வஶப்படுத்தினால், "ஸ்வரூபத்துக்குத் தகுந்த பரமரஸமான தொழில் ப4க3வத்3ப4ாக3வத கைங்கர்யமன்றோ" என்று 'ஆய' என்னும் நான்காம் வேற்றுமையின் அர்த்த2த்தை அநுஸந்தி4த்து,

அந்த விஷயாநுப$_4$வத்தில் நின்றும் மீளவேண்டும். ''விஷயசபல தீ$_4$ஶ்சேத் சதுர்த்தீ$_2$ம்'' என்றதின் விவரணம் இது.

g இப்படித்தான் இவற்றில் நின்றும் மீளாதபோது ''பிறர்க்கு நாம் இதை உபதே$_3$ஶிப்பதற்கும், நமக்கு இதில் பிறந்த அநுஷ்டா$_2$னமில்லாத ஜ்ஞானத்துக்கும் என்ன பயனுண்டு? நாம் அநுஷ்டிக்காத விஷயத்தைப் பிறர்க்குச் சொன்னால் அவர்கள் அநுஷ்டி$_2$ப்பார்களா?'' என்று நினைக்கவேண்டும்.

h இவ்வார்த்தையில் சொன்ன அர்த்த$_2$த்தின் சுருக்கம் :— தன் ஸ்வாதந்த்ர்யத்தாலே தன் கார்யத்தைத் தான் நடத்துவதாக நினைத்தானாகில் அகாரத்தின் பொருளை அநுஸந்தி$_4$த்து அந்நினைவிலிருந்து மீளவேணும். எம்பெருமானைத் தவிர வேறொருவரை ரக்ஷகராக நினைத்தானாகில், உகாரப்பொருளை அநுஸந்தி$_4$த்து அந்நினைவிலிருந்து மீளவேண்டும். தன் நன்மைக்குத்தான் ஸாத$_4$னாநுஷ்டா$_2$னம் செய்யவேண்டுமென்றும், மற்ற ஸ்ரீவைஷ்ணவர்களைத் தன்னையொத்தவர்களாகவும் நினைத்தானாகில் ஸ்வரக்ஷணத்தில் அஶக்தியையும் பா$_4$க$_3$வத ஶேஷத்வத்தையும் சொல்லும் நம: பத$_3$த்தின் பொருளை அநுஸந்தி$_4$த்து அந்நினைவுகளிலிருந்து மீளவேணும். ஈஶ்வரனுடைய செல்வமாயிருப்பவர்களான இதர சேதனர்களுடன் அர்த்த$_2$காமங்கள் காரணமாகத் தனக்கு விருப்பு வெறுப்புகள் உண்டானால், அவர்கள் அனைவரும் எம்பெருமானின் செல்வங்களே என்பதை உணர்த்தும் நாரஶப்$_3$த$_3$த்தின் பொருளை அநுஸந்தி$_4$த்து, அவ்விருப்பு வெறுப்புகளிலிருந்து மீளவேண்டும். கர்மம் காரணமாக—தந்தை, தா$_3$ரம் மக்கள் முதலானாரிடத்தில் 'இவர்களே நமக்கு இயற்கையான உறவினர்கள்' என்ற எண்ணம் ஏற்பட்டதாகில், 'எம்பெருமானே எல்லாவிதமான இயற்கை உறவுகளையுடையவன்' என்பதைக் காட்டும் அயநஶப்$_3$த$_3$த்தின் பொருளை அநுஸந்தி$_4$த்து, அந்த எண்ணத்திலிருந்து மீளவேண்டும். 'பா$_3$ந்த$_4$வாபா$_4$ஸலோல: ஶப்$_3$த$_3$ம் நாராயணாக்$_2$யம்' என்று அருளியதின் விவரணமிது. பிள்ளை, பஶு, அந்நம் முதலான இம்மைச் செல்வங்களிலும், ஸ்வர்க்க$_3$ம் முதலான மறுமைச் செல்வங்களிலும், கைவல்யமாகிற தாழ்ந்த மோக்ஷத்திலும் ''இவையும் அடையத்தக்க பயன்களே'' என்னும் எண்ணம் ஏற்பட்டதாகில், கைங்கர்யத்தின் சிறப்பை விளக்கும் 'ஆய' எனும் நான்காம் வேற்றுமையின் பொருளை அநுஸந்தி$_4$த்து அவ்வெண்ணத்திலிருந்து மீளவேண்டும். திருமந்த்ரஜ்ஞானமுண்டானபின்பு இப்படிப்பட்ட எண்ணங்கள் உண்டாகுமோ? எனில்: அந்த ஜ்ஞா

னம் பிறந்தாலும் பாபம் நிறைந்த இவ்வுலகில் இருப்பவனு கையாலே, அநாதி$_3$ பாபவாஸனையாலும், ஸஹவாஸதோ$_3$ஷத்தா லும், ஸ்வரூபத்துக்குப் பொருந்தாத இந்த எண்ணங்கள் ஏற் படக்கூடும். அப்போது திருமந்த்ரத்தின் பொருளை முற்கூறிய படி திருப்பித்திருப்பி அநுஸந்தி$_4$த்து அந்த எண்ணங்களிலி ருந்து ப்ரபந்நனானவன் மீளவேண்டும். எவ்வளவுக்கெவ்வளவு மீள்கின்றானோ அவ்வளவுக்கவ்வளவு இவனுடைய ப்ரபத்தி நிஷ்டை$_2$ உறுதிபெறும் என்று கருத்து. அஷ்டஶ்லோகியின் நாலாம் ஶ்லோகத்தின் கடைசியில் 'ப்ரபந்ந:' என்று அருளிய தின் கருத்து இதுவேயாகும்.]

11. வார்த்தாமாலை 40 : a திருமந்த்ரத்தாலே ரக்ஷகத்வ ப்ரதிஸம்ப$_3$ந்தி$_4$ பூர்வகமான ரக்ஷ்யத்வம் சொல்லி, அந்யஶேஷத்வ நிவ்ருத்தி பூர்வகமான அநந்யார்ஹ ஶேஷத்வம் சொல்லி, அசேதந வ்யாவ்ருத்தி பூர்வகமான சேதந வைலக்ஷண்யம் சொல்லி, அஹங்காரமமகார நிவ்ருத்தி பூர்வகமான ஸ்வரூபபாரதந்த்ர்யத்தி னுடைய எல்லைசொல்லி, ஔபாதி$_4$க நிவ்ருத்தி பூர்வகமான நிரு பாதி$_4$க ப$_3$ந்து$_4$த்வஞ் சொல்லி, அபுருஷார்த்த$_2$ நிவ்ருத்தி பூர்வக மான புருஷார்த்த$_2$ ஸ்வரூபஞ்சொல்லித் தலைக்கட்டுகிறது.

b விஶேஷண ப்ரதா$_4$நம்—ஆஶ்ரயணம்; c விஶேஷ்ய ப்ர தா$_4$நம்—உபாயம்; d உபா$_4$யப்ரதா$_4$நம்—உபேயம்; e ரக்ஷக னாய் ஶேஷியாயிருக்குமிருப்பை உணருகை—ஈஶ்வர ஸ்வரூபம்; ரக்ஷ்யமாய் ஶேஷமாயிருக்குமிருப்பை உணருகை—ஆத்மஸ்வ ரூபம்; f ரக்ஷகத்வஸ்வாமித்வங்கள் வ்யவஸ்தி$_2$தமானாற்போலே ஶ்ரிய:பதித்வமும் வ்யவஸ்தி$_2$தம்; g ஸ்வவ்யதிரிக்தஸமஸ்த பதா$_3$ர்த்த$_2$ங்களும் ப$_4$க$_3$வதா$_3$பி$_4$மாநத்திலே கிடக்கிறது; புறம்புள் ளார் இப்படி சொல்லாநிற்கச்செய்தே தாங்கள் அபி$_4$மாநியா நிற்பர்கள்.

h தாய்மடியிலே கிடந்து உறங்குகிற ப்ரஜை ஸ்வப்நத் திலே புலியின் கையிலே அகப்பட்டுக் கூப்பிடுமாபோலே தன்னை உணர்ந்த த$_3$ஶை; i கண்ணை விழித்துத் தாய் முகத்தைப் பார்த்து நிர்ப$_4$யனாயிருக்குமாபோலே—எம்பெருமானை உணர்ந்த த$_3$ஶை; j உபாயத$_3$ஶையில் எம்பெருமானாலே எம்பெருமானைப் பெறுமித்தனையொழிய, தந்தாம் நன்மைகொண்டு பெற நினை யார்—ஸ்வரூபஜ்ஞாநமுடையார்.

k இந்த ஸ்வாதந்த்ர்யம் தலையெடுத்தால் அகாரத்துக்கு அர்ஹனல்லன்; l ஒருவனுடைய வ்ருத்தத்தை இட்டாதல், ஜந்மத்தையிட்டாதல் தண்ணியதாக நினைக்கில் மகாரத்துக்கு அர்ஹனல்லன்; m பிறர் தனக்கு ரக்ஷகரென்றிருந்தானாகில் உகாரத்துக்கு அர்ஹனல்லன்; n தனக்குத்தான் ரக்ஷகனென்று நினைத்த போது நமஸ்ஸுக்கு அர்ஹனல்லன்; o தன் கார்யத்துக்குத் தான் கடவனென்று நினைத்தபோது நாராயணபத₃த்துக்கு அர்ஹனல்லன்; p செய்ததொரு கைங்கர்யத்தைத் தானுகத்தல் பிறருகத்தல் செய்யில் சதுர்த்தி₂க்கு அர்ஹனல்லன்; q இவ்வர்த்த₂ம் ஒரு அதி₄காரி அறிந்து தவிர்ந்தபோது திருமந்த்ரார்த்த₂ம் கைப் புகுந்ததாகக்கடவது; அல்லாதபோது திருமந்த்ரத்தோட்டை ஸம்ப₃ந்த₄ம் ஸந்தே₃ஹமாமித்தனை என்று ப₄ட்டர் அருளிச் செய்தார்.

[விவரணம் : a திருமந்த்ரத்தில் அகாரத்தாலும் மகாரத்தாலும் முறையே—'ரக்ஷிப்பவன் எம்பெருமானே' என்றும், 'ரக்ஷிக்கப் படுமவன் ஜீவன்' என்றும் சொல்லி உகாரத்தாலே மற்றவர்க்கு அடிமைப்பட்டிருப்பதிலிருந்து நீங்கி எம்பெருமானுக்கே அடிமைப் பட்டிருக்கையாகிற அநந்யார்ஹஶேஷத்வம் சொல்லி, மகாரத் தாலே—அறிவற்றதாய், விகாரமுடையதாய், அநித்யமான அசேதனத்தைக் காட்டிலும் வேறுபட்டவனாய், அறிவுள்ளவனாய் விகாரமற்றவனாய், நித்யனான சேதனனுடைய பெருமையைச் சொல்லி நமஶ்ஶப்₃த₃த்தாலே அஹங்காரமமகாரங்கள் நீங்கின ஸ்வரூபத்தின் பாரதந்த்ர்யத்தின் எல்லை நிலமான பாகவதஶேஷத்வ பாரதந்த்ர்யங்களைச் சொல்லி, நாராயண ஶப்₃த₃த்தாலே கர்மம் காரணமாக ஏற்பட்ட உறவினர்களிடம் பற்றறுந்து. இயற்கையுறவினனான எம்பெருமானிடம் பற்று ஏற்படுவதைச் சொல்லி, நாலாம் வேற்றுமையாலே தகாத பயன்களிலிருந்து மீண்டு தக்க பயனாகிற ப₄க₃வத்₃ ப₄ாக₃வத கைங்கர்யம் ஏற்படுவதைச் சொல்லுகிறது.

b த்₃வயத்தின் பூர்வக₂ண்ட₃த்தில் சொல்லப்படும் ப₄க₃வதா₃ஶ்ரயணம் விஶேஷணபூ₄தையாய், புருஷகாரமான பிராட்டியை ப்ரதா₄னமாகக் கொண்டது. பிராட்டியின் புருஷகாரமில்லாவிடில் எம்பெருமானை ஆஶ்ரயிப்பது இயலாது என்பது கருத்து.

c த்₃வயத்தின் பூர்வக₂ண்ட₃த்தில் ஶரணஶப்₃த₃த்தால் சொல்லப் படும் மோக்ஷோபாயம் விஶேஷ்யமான எம்பெருமானை ப்ரத₄ானமாகக்கொண்டது. அவனுக்கு விஶேஷணமான குணங்களுக்கும் தி₃வ்யமங்க₃ளவிக்₃ரஹத்துக்கும் அப்ரத₄ானமான உபாயத்வமே உண்டு என்று கருத்து. d த்₃வயத்தின் உத்தரக₂ண்ட₃த்தில் சொல்லப்படும் உபேயம் விஶேஷ்யமான எம்பெருமானையும், விஶேஷணமான பிராட்டி; கு₄ணங்கள், தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹம் நித்யமுக்தர்களாகிய அந்தமில் பேரின்பத்தடியார்கள் முதலானவர்களையும் ப்ரத₄ானமாகக் கொண்டது. e ஈஶ்வரன் ரக்ஷகனாய் ஶேஷியாகவும், ஆத்மா ரக்ஷ்யமாய் ஶேஷமாகவுமிருக்கும் என்று கருத்து. f உபாயத்வமும், ஸர்வஸ்வாமித்வமும் எம்பெருமானொருவனிடத்திலேயே இருப்பதுபோல், ஸ்ரீதே₃வியின் பதியாயிருக்கும் தன்மையும் எம்பெருமானொருவனிடத்திலேயே உள்ளது. எம்பெருமானையொழிந்த எல்லாப் பொருள்களும் அவனுடைய அபி₄மானத்திலே ஒதுங்கி நிற்கின்றன. விஶிஷ்டாத்₃வைத ஸ்ரீவைஷ்ணவர்களல்லாத அத்₃வைதிகள் முதலானாரும் இப்படி எம்பெருமானுடைய பரத்வத்தைச் சொல்லிக்கொண்டிருந்தும், தாங்களே ஸ்வதந்த்ரர்களென்றும் அபி₄மானிக்கிறார்கள்.

h ஜீவன் தன்னை எம்பெருமானுக்குப் பரதந்த்ரனாக உணர்ந்தானாகில் ஶரீர ஸம்ப₃ந்த₄த்தைக் கண்டு நடுங்கி, தாய் மடியில் கிடந்து உறங்குகிற குழந்தை கனவிலே புலியின் கையிலே அகப்பட்டுக் கதறுவதுபோலே கதறுவான். i எம்பெருமான் தனக்கு ரக்ஷகன் என்று உணர்ந்தானாகில், அக்குழந்தை கண் விழித்ததும் தாயின் முகத்தைப் பார்த்து ப₄யம் கெட்டிருப்பது போல் ப₄யங்கெட்டிருப்பான். j தம்முடைய அத்யந்த பாரதந்த்ர்ய ஸ்வரூபத்தை உணர்ந்தவர்கள்—இவன் கையில் எதையும் எதிர்பாராத இயல்பான உபாயமான எம்பெருமானாலே எம்பெருமானைப்பெற நினைப்பார்களேயொழிய, உபாயாந்தரங்களையோ, தாம் எம்பெருமானைப் பற்றுவதாகிற உபாயஸ்வீகாரத்தையோ கொண்டு புருஷார்த்த₂த்தைப் பெற நினையார்கள்.

k ஜீவன் தன்னை ஸ்வதந்த்ரனாக நினைத்தால், ஸர்வஜக₃த் காரணனாகவும், ஸர்வரக்ஷகனாகவும் எம்பெருமானைச் சொல்லும் அகாரத்தின் பொருளைப் புரிந்துகொள்ளாதவனாவான். l ஒருவனுடைய நடத்தையையோ பிறப்பையோ பார்த்து அவனுடைய

ஸ்வரூபமே தாழ்ந்தது என நினைத்தானால், எல்லா ஜீவர்களை யும் ஜ்ஞாநாநந்த₃ ஸ்வரூபர்களாய் ஒருபடிப்பட்டவர்களாகச் சொல்லும் மகாரத்தின் பொருளைப் புரிந்துகொள்ளாதவனாவான். m பிறர் தமக்கு ரக்ஷகர் என்று நினைத்திருந்தானாகில், எம்பெரு மானையே ரக்ஷகனாகச் சொல்லும் உகாரத்தின் பொருளைப் புரிந்து கொள்ளாதவனாவான். n. தனக்குத்தானே ரக்ஷகனென்று நினைத் தானாகில், தன்னை ரக்ஷித்துக்கொள்ளத் தனக்குத் தகுதியில்லை என்று காட்டும் நமஸ்ஸின் பொருளைப் புரிந்து கொள்ளாதவனா வான். o தனக்கு ஹிதத்தைத் தானே செய்துகொள்ளவேண்டு மென்று நினைத்தானாகில், நரஸமூஹங்களாகிற எல்லா ஜீவர் களுக்கும் உபாயம் எம்பெருமானே என்று காட்டும் நாராயண ஶப்₃த₃த்தின் பொருளைப் புரிந்து கொள்ளாதவனாவான். p எம் பெருமானுக்குச் செய்த கைங்கர்யம் அவனுடைய உகப்புக்கும் அவனடியார்களுடைய உகப்புக்குமே உறுப்பு என்று உணராமல் தன் உகப்புக்கும் மற்ற ப்ராக்ருதர்களுடைய உகப்புக்கும் உறுப்பு என்று நினைத்தானாகில், எம்பெருமானுடைய உகப்புக்கே கைங்கர்யம் செய்யவேணும் என்ற பொருளைக் காட் டும் நாலாம் வேற்றுமைப் பொருளைப் புரிந்துகொள்ளாதவனா வான். q இவ்வர்த்த₂ங்களை ஓர் அதி₄காரி நன்குணர்ந்து முற் கூறிய நினைவுகளைத் தவிர்ந்தபோது திருமந்த்ரார்த்த₂த்தை நன்கு உணர்ந்தவனாவான்; அப்படியில்லாவிடில் அவன் திருமந்த்ரார்த் த₂த்தை நன்குணர்ந்தவனா என்பது ஸந்தே₃ஹமே என்று இவ் வளவும் பட்டர் அருளிச்செய்த வார்த்தை.]

**13. வார்த்தாமாலை 46 :** ப₄ட்டரும் ஸ்ரீவைஷ்ணவர்களுமாகத் திருவீதியிலே எழுந்தருளியிருக்கச் செய்தே, விளையாடிக்கொண்டு வருகிற பிள்ளைகளைப் பார்த்து, "பிள்ளைகாள்! a திருமந்த்ரத் திலே பிறந்தாற்போலே உங்களுக்கு இத்தனை செருக்கென்?" என்று அருளிச்செய்தார்.

[விவரணம் : a திருமந்த்ரமானது "பெற்ற தாயினுமாயின செய்யும்" [பெரிய திரு. 1-1-9] என்கிறபடியே தாயாகவும், அதை அளித்த ஆசார்யன் தந்தையாகவும் சொல்லப்படுகிறபடி யால் ஓர் ஆசார்யனிடமிருந்து திருமந்த்ரோபதே₃ஶம் பெற்றவன் திருமந்த்ரத்திலே பிறந்தவன் என்று கூறப்படுகிறான். அவனுக்கு ஸம்ஸாரப₄யம் இல்லாமையாலே ப₄யங்கெட்டுச் செருக்குடன் வாழ்கிறான் என்று கருத்து.]

**14. வார்த்தாமாலை 59c : [இது ஆசார்ய வைபவ மஞ்ஜரி 2-ம் பாகம் (4-11), (38-18) வார்த்தைகளின் தொடர்ச்சி]**

'ஸக்ருதே₃வ' என்பர் பட்டர்.

[விவரணம் : இனி, "'ஸக்ருதே₃வ' (ஒரு தடவையே) என்றது 'ஸர்வேஶ்வரன் இவனைக் கைக்கொள்வதற்கு, ஆசார்யன் உபதே₃ஶிக்க இவன் த்₃வயத்தை உச்சரிக்கும் காலத்தில் சொல்லும் ஒரு தடவையே போதுமானது' என்பதைக் காட்டுகிறது; த்வயத்தை ஆயுள் உள்ளவரை இடைவிடாமல் அநுஸந்திப்பது ஸித்₃தோ₄பாயத்தின் பெருமையை அநுஸந்தி₄ப் பதாலுண்டான இனிமையாலேயாகும். ஒருகால் சொன்னால் போராது என்ற நினைவாலேயன்று" என்பது பட்டர் நிர்வாஹம்.

**15. வார்த்தாமாலை 79 :** ப₄ட்டர் ஒருவர்க்கு ஹிதமருளிச் செய்கிறபோது. நஞ்சீயர், "பிராட்டி முன்னிலையாகப் பற்றுகிற இதுக்கு ப்ரயோஜநமென்?" என்று கேட்க, a இவள் ஸந்நிதி; யாலே—மிகவும் ஸாபராதி₄யான காகம் தலைகொண்டு தப்பிற்று. அத்தனைக்கு அபராதமின்றியிலேயிருக்க இவள் ஸந்நிதி₄யில்லா மையாலே ராவணன் தலையறுப்புண்டான்; இளையபெருமாள் பிராட்டி முன்னிலையாகப் பெருமாள் திருவடிகளைப்பற்றி, தம்மை "நில்" என்ற ஸங்கல்பத்தையும் அழித்துப் பெருமாளையும் பெற்றுவிட்டார்; மற்றும் ஸ்ரீவிபீ₄ஷணாழ்வான், ஸ்ரீகுஹப்பெருமாள் தொடக்கமானார் பிராட்டி முன்னிலையாகப் பெற்றாராய்த்து.

[விவரணம் : a இவ்விஷயம் முமுக்ஷுப்படி 135-வது சூர்ணையிலும், அதன் வ்யாக்₂யானத்திலும் விவரிக்கப்பட்டுள்ளது. மற்ற விஷயங்கள் தெளிவானவை.]

**16. வார்த்தாமாலை 82 :** ப₄ட்டர் ஜீயருக்கு த்₃வயத்தின் அர்த்த₂த்தை அருளிச்செய்தருளி, இதில் உத்தரார்த்த₄ம் அநுஸந்தி₄க்கலாவது பரமபத₃த்தைச் சென்றாலாயிருக்கும். இங்கே இவ்வர்த்த₂ம் அநுஸந்தித்தவன் ஜீவந்முக்தன் என்றருளிச்செய் தார்.

[விவரணம் : எம்பெருமான் விஷயத்தில் பரார்த்த₂ாநுப₄வ கைங்கர்யங்களைச் சொல்லும் உத்தரார்த்த₄த்தின் பொருளைப் பரிபூர்ணமாக அறிவது பரமபதத்திலேயேயாகும். ஆழ்வார்களை யும் ஆசார்யர்களையும் போன்ற மஹான்கள் இவ்வுலகில் இருக் கும்போதே எம்பெருமானுடைய நிர்ஹேதுக க்ருபையாலே அதைப் பரிபூர்ணமாக அறிந்தார்களாகையாலே ஜீவந்முக்தர்கள் (இவ் வுலகில் இருக்கும்போதே முக்தர்களை ஒத்திருப்பவர்கள்) என்று கருத்து.]

**17. வார்த்தாமாலை 88 :** பட்டர் ஸ்ரீபாதத்தில் ஸம்பந்தமுடையாரொரு a ஸோமயாஜியரான ஸ்ரீவைஷ்ணவர், 'எனக்குத் திருவாராதந க்ரமத்தை அருளிச்செய்யவேணும்' என்ன; பட்டரும் இவர்க்கு உடையவருடைய b நித்யப்ரகாரத்தை அருளிச்செய்ய; அவரும் அதுகொண்டு நெடுநாள் திருவாராதநம் பண்ணிப்போரச்செய்தே, ஒன்றிரண்டுநாள் பட்டர் திருவாராதநத்திலே ஸேவித்திருந்தார்; அங்கு, தமக்கு அருளிச்செய்தவையொன்றும் கண்டிலர்; அவர் திருவாராதநம் பண்ணியருளினபடி:— தாம் திருமஞ்சநம் பண்ணிச் சேலைசாத்தித் திருநாமம் சாத்தி அமுது செய்யத் தளிகை வைத்தவளவிலே 'c தெற்காழ்வாரை எழுந்தருளுவித்துக்கொண்டு வாருங்கோள்' என்று தமக்குப் படைத்த திருப்போனகத்தையும் தண்ணீரமுதையும் அமுது செய்யப்பண்ணி ப்ரஸாதப்பட்டருளினார்; இத்தைக்கண்டு அந்த ஸ்ரீவைஷ்ணவர், 'எனக்கு அருளிச்செய்தபடியொன்று; தேவரீர் இப்படி செய்தருளிற்று; இதுக்கடியென்?' என்று ஆர்த்தியோடே கேட்க; d ஸகலவேத ஶாஸ்த்ரங்களையும் ஆராய்ந்தவிடத்து உமக்கு அப்படியல்லது சொல்லலாவதில்லையாயிருந்தது; e என்னை நிரூபித்தவிடத்து இப்படியொழியச் செய்கைக்கு ஒரு செயல் கண்டிலேன் என்றருளிச்செய்தார்.

[**விவரணம் :** a ஸோமயாஜியர்-ஸோமயாகமும் செய்து வேதத்தின் பூர்வபாகத்திலே ஊன்றிப்போருமவர். இது ஸாபிப்ராய (கருத்தோடு கூடிய) விஶேஷணம். இப்படிப்பட்ட கர்மடர்களுக்குத் திருவாராதனம் விஸ்தாரமாயிருந்தாலொழிய அதில் ப்ரதிபத்தி பிறக்காதாகையாலே, 'பட்டர் அவருக்கு விரிவாகத் திருவாராதன க்ரமம் உபதேஶித்தார் என்று கருத்து. b நித்யப்ரகாரம்—எம்பெருமானாருடைய நித்யக்ரந்தத்தில் சொல்லப்பட்ட திருவாராதன முறை; c தெற்காழ்வார்—பட்டருடைய திருவாராதனப்பெருமாள். d எல்லா வேதஶாஸ்த்ரங்களையும் கொண்டு எம்பெருமானுடைய பெருமையைப் பார்க்கும்போது, தரித்து நின்று நீண்டநேரம் திருவாராதனம் பண்ணவல்ல உமக்கு. எம்பெருமானுடைய பெருமைக்கும் உம்முடைய வன்மைக்கும் பொருந்தும்படியாக விரிவான திருவாராதனக்ரமத்தை உபதேஶித்தேன் என்று கருத்து. e எம்பெருமானைக் கண்டவுடன் ஆழ்வார்களைப்போலே "காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்" [பெரிய திருவ. 34] என்று தளர்ச்சியடையும் என்னைப் பார்க்கும்போது, இப்படிச் சுருக்கமான திருவாராதன க்ரமமே பொருந்தும் என்று கருத்து.]

18. வார்த்தாமாலை 93 : அத்₃ருஷ்டத்தை த்₃ருஷ்டமாக அநுஸந்தித்தும், த்₃ருஷ்டத்தை அத்₃ருஷ்டமாக அநுஸந்தி₄த்த போதுமிறே இவன் முமுக்ஷுவாவது என்று ப₄ட்டரருளிச் செய்தார்.

[விவரணம் : கண்ணுக்குத் தோற்ருத பரமபத₃ாநுப₄வம் முதலானவற்றை, ஆசார்யோபதே₃ஶம் முதலானவற்றிலுள்ள நம்பிக்கையாலே கண்காண நிற்கும் ப்ரத்யக்ஷம்போலே அநுஸந்தி₄த்தும், கண்ணுக்குத் தோன்றும் ப்ராக்ருதப் பொருள்களில் பற்று அறுகையாலே, காணுத பொருள்களைப்போலே அவற்றை அநாத₃ரித்தும் நிற்கும் நிலை ஏற்பட்டால் அவனுக்கு முமுக்ஷுத்வம் (மோக்ஷமடைவதில் விருப்பம்) உண்டானதாகக் கொள்ளலாமென்று கருத்து.]

19. வார்த்தாமாலை 98 : பிள்ளை திருநறையூரரையரும், நம்பி திருவழுதி வளநாடு தா₃ஸரும்—a "வேம்பு முற்றமுற்றக் கைக்குமாபோலே இவ்வாத்மாவும் ஒருநாளைக்கு ஒருநாள் விஷயாந்தரங்களிலே மண்டா நின்றது; இதுக்கு ப₄க₃வத்ப்ராப்தி கூடுமோ?" என்று பட்டரைக் கேட்க; "b ஶரீரவியோக₃ஸமயத்திலேயாகிலும் இஶ்ஶரீரத்தில் உபேக்ஷையைப் பிறப்பிக்கையாலும், ஸ்ரீமாலாகாரர்க்குத் தன் வடிவழகைக் காட்டினாற்போலே இவனுக்கும் வடிவழகைக் காட்டுகையாலும் அது கூடும்" என்று அருளிச் செய்தார்; இதுக்கு ப்ரமாணம் :— "ந க₂லு பா₄க₃வதா யமவிஷயம் க₃ச்ச₂ந்தி".

[விவரணம் : a வேப்பமரம் நாளாக நாளாகக் கசப்பு அதி₄கமாவதுபோலே, இவ்வுலகில் சேதனர்களும் நாளாக நாளாக ஶப்₃தா₃தி₃ விஷயங்களில் மிகவும் ஈடுபடுகிருர்கள். இத்தகைய இவர்கள் எம்பெருமானை எப்படி அடையமுடியும்?" என்பது கேள்வியின் கருத்து. "b எம்பெருமான் இந்த ஶப்₃தா₃தி₃ விஷயஸுக₂ங்களை அற்பமாகவும் நிலைநில்லாததாகவுமே படைத்திருக்கையால், இச்சேதனனுக்கு ஶரீரம் விடும் ஸமயத்திலாவது இந்த ஶரீரத்திலும் அதைக்கொண்டு அநுப₄விக்கும் விஷயங்களிலும் ஈடுபாடின்மையை எம்பெருமான் உண்டாக்கிவிடுவான். தன்னை ஆஶ்ரயித்தபின்பு, ஸ்ரீமாலாகாரருக்குத் தன் வடிவழகைக் காட்டினாற்போலே இச்சேதனனுக்கும் அர்ச்சாஸ்த₂லங்கள் முதலான இடங்களில் அடிக்கடி தன் வடிவழகைக் காட்டி, மற்ற விஷயங்களிலுள்ள ஈடுபாட்டைப் படிப்படியாகக் குறைத்துவிடு

கிருன். ஆகையால் எம்பெருமானை ஆஶ்ரயித்த சேதனன் அவனை யடையத் தட்டில்லை. 'ப$_4$க$_3$வத்$_3$ ப$_4$க்தர்கள் யமனுடைய நாட்டிற்குச் செல்லமாட்டார்களன்றோ' என்னும் பொருளுள்ள வேத$_3$ வாக்யம் இவ்விஷயத்தில் ப்ரமாணம்'' என்பது பதிலின் கருத்து.]

**20.** வார்த்தாமாலை **104 :** 2-ம் பாகம் **141-5** காண்க.

**21.** வார்த்தாமாலை **106 :** ப$_4$ட்டர் ''த்$_3$வயத்தின் அர்த்த$_2$த்தை பு$_3$த்$_3$தி$_4$ பண்ணி ஸப்$_3$த$_3$ாந்தரத்தாலே இவ்வர்த்த$_2$த்தை அநுஸந்தி$_4$க்கவொண்ணுதோ?'' என்று உடையவருக்கு விண்ணப்பஞ்செய்ய; ''அதுக்குக் குறையில்லை; ஆகிலும் இப்பாசுரத்துக்குச் சுரக்கும் அர்த்த$_2$ம் வேறொரு பாசுரத்துக்குச் சுரவாதே'' என்று அருளிச்செய்தார்.

[விவரணம் : ''வேறொரு ப்ரமாண வாக்யத்தாலே த்$_3$வயத்தின் அர்த்த$_2$த்தை அநுஸந்தி$_4$க்கக் கூடாதா?'' என்பது ப$_4$ட்டரது கேள்வியின் கருத்து. ''அர்த்த$_2$மே முக்$_2$யமாகையாலே, அப்படி த்$_3$வயத்தின் அர்த்த$_2$ம் முழுவதையும் வெளிப்படுத்தும் ப்ரமாண வாக்யம் இருந்தால் அதைக்கொண்டு த்$_3$வயார்த்த$_2$த்தை அநுஸந்திக்கக் குறையில்லை; ஆனால் த்$_3$வயார்த்த$_2$ம் முழுவதையும் சுரக்கும் (வெளிப்படுத்தும்) வேறொரு ப்ரமாணம் இல்லாமையாலே, த்$_3$வயத்தைக் கொண்டே இவ்வர்த்த$_2$ங்களை அநுஸந்தி$_4$ப்பதையே நம் ஆசார்யர்கள் ஆத$_3$ரித்துப் போருகிருர்கள்'' என்பது எம்பெருமானுருடைய பதிலின் கருத்து.]

**22.** வார்த்தாமாலை **122 :** அப்பிள்ளைப்பிள்ளைக்கு ப$_4$ட்டர், 'பெரியபெருமாள் கண்வளருகிறபடி பு$_3$த்$_3$தி$_4$பண்ணினீரே' என்றருளிச்செய்த் வார்த்தை :— வைஷ்ணவன் கர்மங்களினுடைய க$_4$னத்தைப் பார்த்து ப$_4$யப்பட, மடித்த திருக்கையில் திருவிரல்கள் 'உன்னை ரக்ஷிக்கைக்குக் கவித்த முடியன்றோ' என்று தொட்டுக்காட்டுகிறன; திருவடிகளிலே நேரே பொகட்ட திருக்கை ப்ரஜையினுடைய நாவிலே முலைக்கண்களை நெருடிக் கொடுக்கும் மாதாவைப்போலே, திருவடிகள் புகலிடமென்று காட்டுகிறது என்று அருளிச்செய்தார்.

[விவரணம் : ''பெரியபெருமாள் கிடந்ததோர் கிடக்கையாக ஶயனித்திருக்கும் திருக்கோலத்திலே இரண்டு திருக்கைகளும் அமைந்திருக்கும் முறையே சேதனனுக்குத் தஞ்சமாயிருக்கின்றது' என்று ப$_4$ட்டர் அப்பிள்ளைப் பிள்ளைக்கு அருளிச்செய்த

வார்த்தை இது. அதாவது—வைஷ்ணவன் தன்னை நலியும் அநாதி$_3$ கர்மங்களின் மிகுதியைப் பார்த்து ப$_4$யப்பட, மடித்துத் திருமுடியைத் தொட்டுக்கொண்டிருக்கும் வலது திருக்கையில் திருவிரல்கள் "உன்னை ரக்ஷிப்பதற்காக நான் இட்டுக் கொண்டிருக்கும் முடியன்றோ இது" என்று தொட்டுக்காட்டி அப$_4$யமளிக்கின்றன. திருவடிகளை நோக்கி நேரேயிருக்கும் இடது திருக்கை—கைக்குழந்தையின் வாயிலே தனது முலைக் கண்களை நெருடிக்கொடுக்கும் தாயைப்போலே, கைக்குழந்தைக்குத் தாய் முலைபோலே ஶேஷபூ$_4$தனுக்கு ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் இருக்கும் திருவடிகளை 'இவையே உனக்குப் புகல்' என்று காட்டுகிறது என்று அருளிச்செய்தார். ஸ்ரீரங்க$_3$ராஜஸ்தவத்தில் "கிரீடம் ஸ்ரீரங்கே$_3$ஶயிது:" [ர. ஸ்த. 1-110] எனத் தொடங்கும் ஶ்லோகத்தில் ப$_1$ட்டர் இவ்வர்த்த$_2$த்தைக் காட்டியிருப்பதைக் கண்டு சுவைக்கலாம்.]

**23**. வார்த்தாமாலை 131 : ப$_4$ட்டர் a திருவணையாட எழுந்தருளாநிற்க பாதிரிக்கொடியிலே, b போதுவைகி வந்து ஒரு வேடனகத்திலே புக, அவன் தானிருந்த ஆஸநத்தையும் வாங்கிப் பொகட்டு ஒரு கட்டிலையுங்கொடுக்க, அதிலே எழுந்தருளியிருந்து :— "இவன் நம்முடைய வைப$_4$வத்தையறிந்து செய்தானல்லன், க்$_2$யாதிபரனாய்ச் செய்தானல்லன், நம்மாலே உபக்ருதனாய்ச் செய்தானல்லன், தன்னுடைய க்$_3$ருஹத்திலே புகுந்தோமென்கிற அபி$_4$மாநமிறே அவன இது செய்யவேண்டிற்று. ஈஶ்வரன் தன் அபி$_4$மாநத்திலே ஒதுங்கினாரை என்னினைத்திருக்கிறானோ?" என்று அநுஸந்தி$_4$த்தருளி, "ஐயா! இற்றைக்கு விஶேஷமென்?" என்று கேட்டருள, "நாயன்றே! காட்டிலே வேட்டைக்குப் போனேன்; அங்கே ஒரு முசல்குட்டியைப் பிடித்தேன்; அதினுடைய தாயானது பின்னே முடுகிவந்து ஒரு c எரிவெளியானவாறே முன்னே வந்து கும்பிட்டுக்கொண்டு கிடந்தது; எனக்கு அத்தைக்கண்டு வ்யஸநமாய்க் குட்டியை விட்டேன்" என்றான்; இதைக்கேட்டு, "இது சேதநனுக்கில்லாததொன்று; பரமசேதநனுக்குள்ளதொன்று; d 'மாமேகம் ஶரணம் வ்ரஜ' என்று இம்முசலுக்கு உபதே$_3$ஶித்தாரில்லை; e 'அரி: ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய: க்ருதாத்மநா' என்று வேடனுக்கு உபதே$_3$ஶித்தாரில்லை, அவ்யவஹி$_4$தநேந ஶரணாக$_3$தி ப$_2$லித்ததே! இதொரு ப்ரமாண ப்ரஸித்$_3$தி$_4$யென்?" என்று அருளிச்செய்தார்.

[விவரணம் : a திருவணையாடுதல்—ஸேதுஸ்நானம் செய்தல். b போதுவைகி—அஸ்தமனமாகி. c எரிவெளி—பொட்டல்வெளி. d "என்னையொருவனையே உபாயமாகப் பற்றுவாய்" [கீதை 18-66] என்னும் சரமஶ்லோகம். e "ஶரணமடைந்த விரோதி$_4$ பிராணனை விட்டும் நல்லவனால் காப்பாற்றத்தக்கவன்" [ரா. யு. 18-29]

